# தலைவன் ஒரு சிந்தனை

டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி



கங்கை புத்தக நிலையம்

# தலைவன்
# ஒரு
# சிந்தனை

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி




23, தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை - 17

முதற் பதிப்பு : ஜூலை 1979
பத்தாம் பதிப்பு : ஆகஸ்ட் 2003
பதினொன்றாம் பதிப்பு : செப்டம்பர் 2006



**விலை: ரூ. 35-00**

- Title : **THALAIVAN ORU SINTHANAI**
- Author : Dr. M.S. UDAYAMURTHI
- Language : Tamil
- Subject : Essay
- Edition : Eleventh Edition, September, 2006
- Pages : 144
- Published by : **GANGAI PUTHAKA NILAYAM**
  23, Deenadayalu Street,
  Thyagaraya Nagar,
  Chennai–600017.
  ✆ 24342810 / 24310769
- Price : **Rs. 35–00**

ஆசிரியர் முகவரி
டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி
மக்கள் சக்தி இயக்கம்
17ஏ, சௌத் அவென்யு
காமராஜ் நகர், திருவான்மியூர்
சென்னை – 600 041.

---

Printed at: Malar Printers, 044-30284803

# நன்றி

இக்கட்டுரைகளைத் தொடராக விகடனில் பிரசுரித்த விகடன் ஆசிரியர் பாலன் அவர்களுக்கும், என்னைப் பெரிதும் ஊக்குவித்து எழுதச் செய்த நண்பர் மணியன் அவர்களுககும் என் நன்றி. எனது கட்டுரைகளின் ஒரு மாறுபட்ட நோக்கைப் புலப்படுத்தும் வண்ணம் படங்கள் வரைந்த ஓவியர் அனுவுக்கும் விகடன் ஓவியர் குழுவிற்கும் என் நன்றி.

எம்.எஸ். உதயமூர்த்தி

# முன்னுரை

தலைமை என்பது எல்லோருடைய பொறுப்பையும் தானாக விரும்பி ஒரு மனிதன் ஏற்றுக் கொள்வது. மறு பக்கத்தில் எல்லா மக்களும் இவர்மீது நம்பிக்கை கொண்டு தங்கள் உரிமைகளையும் சுதந்திரத்தையும் ஒப்படைக்கும் மாபெரும் தியாகம் இது.

ஆக ஆள்பவர், ஆளப்படும் மக்கள் என்ற இரண்டுபேரும் ஈடுபடும் ஒரு மகத்தான செயல்தான் தலைமை. "என் கையில் அதிகாரம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது" என்று சுயநலமாகவோ ஆணவ மனோபாவத்துடனோ, அதிகார செல்வாக்குடனோ ஒரு தலைவன் நடந்துகொள்ள முடியாது; அதே போல "அவர் கையில் பொறுப்பை ஒப்படைத்து விட்டோம். எல்லாம் நல்லவிதமாக நடக்கும்" என்று மக்கள் கண்காணிக்காமல் போனால்,—தட்டிக் கேட்காமல் போனால்,—தங்கள் பொறுப்பை அலட்சியம் செய்தால், தலைவனைத் தேர்ந்தெடுத்த மக்களுக்குத்தான் கேடு வரும்; அவர்கள்தான் அல்லல் உறுவார்கள்.

இவ்வுலகில் எல்லாமே ஒன்றுக்கொன்று உதவியாகவும் ஒன்றை ஒன்று சார்ந்தும்தான் படைக்கப்பட்டிருக்கிறது. தலைவனுக்கும் மக்க ளுக்குமுள்ளஉறவு பெரிய மரியாதைக்குரிய உறவு.

அந்த உறவை இரண்டுபேரும் நிறைவேற்ற வேண்டும். யாராவது ஒருவர் தவறினால்கூட பொதுவாழ்க்கை—நாட்டின் நலம்—சீர்குலைந்து போகும்.

அதாவது மனிதர்கள் தங்கள் சுயதர்மத்தை இயல்பான சுபாவத்தை உணர்ந்து அதற்கேற்ற தொழிலில் இறங்குவது நல்லது. அதேசமயத்தில் தங்கள் உரிமைகள் பறிபோகும்போது, அதைப் பாதுகாக்க எழும் துணிவு கொண்டவர்களாக வாழ வேண்டும். நமக்கு தலைமைப் பண்பும் ஓரளவு தேவை. குடிமக்களாக நமது தொழிலைத் திறம்பட செய்து, நம் உரிமைகளுடன் வாழும் பண்புகளும் தேவை.

இன்று உலகில் நடப்பது என்ன எ்ன்றால் ஆசை வேறு, நியாயம் வேறு, என்பதை பெரும்பாலோர் உணர்வதில்லை. பெரும்பாலோர் ஆசையினால் ஆளப்படுகிறார்கள. தூண்டப்படுகிறார்கள். வெளிப்படையாகச் சொன்னால் தகுதியில்லாத வர்கள் தலைமைப் பெறுப்புக்கு வருகிறார்கள்.

இன்னும் தெளிவாகச் சொன்னால் திருடர்கள் நாட்டின் தலைவர்களாக தலைவிகளாக வருகிறார் கள்; அநியாயம் செய்ய அஞ்சாதவர்கள், பிறர் உரிமைகளைப் பறிக்கத் தயங்காதவர்கள், தங்கள் சுயநலத்திற்காகப் பதவியைக் காப்பாற்றிக் கொள்ள நீதியைக் காற்றில் பறக்கவிடுபவர்கள், நாட்டின் தலைமை ஏற்கிறார்கள்.

கடையில் கத்தரிக்காயோ தேங்காயோ வாங்கும் நாம் அது நல்லதா அல்லது சொத்தையா அல்லது அழுகத் துவங்குகிறதா, வாடி வதங்கி இருக்கிறதா என்று பார்த்து வாங்குகிறோம். ஒரு நாட்டின் தலைவனைத் தேர்ந்தெடுப்பதில் மட்டும் மக்கள்

கோட்டை விடுகிறார்கள். ஒரு ஒழுக்கமற்றவனைத் தலைவனாகத் தேர்ந்தெடுத்துவிட்டு "அவன் புடைவைக் கடையில் மட்டும்தான் திருடுவான் என்றிருந்தேன், இன்று என் வீட்டிலேயே கன்னம் வைக்கிறானே" என்று அங்கலாய்க்கிறோம்.

அடுத்து, யாரும் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மேல் இரண்டு முறைக்கு மேல் அல்லது அதிகப் படியாக எட்டு ஆண்டுகளுக்கு மேல் யாரும் தலைமைப் பதவியில் இருக்கக்கூடாது என்கிற உணர்வும், தீர்வும், சட்டங்களும் நம் நாட்டில் இல்லை.

பதவியில் பலநாள்—பலகாலம் இருப்பவர்கள் பதவி நிரந்தரம் என்றும் தான் எதையும் செய்யலாம் என்றும் யாரும் தம்மை அசைக்க முடியாது என்றும் எண்ணி சர்வாதிகாரிகளாக மாறுகிறார்கள். உலக சரித்திரம் கூறும் உண்மை இது.

தலைவன் தவறும் ஒவ்வொரு முறையும் நாட்டு மக்கள் அனைவரும் எழுந்து ஒன்று சேர்ந்து போராடித்தான் ஒரு முரடனை, அயோக்கியனை பதவியிலிருந்து நீக்க வேண்டுமென்றால் இது சாத்தியமான காரியம் அல்ல; இதற்குப் பெயர் ஜனநாயகமல்ல.

ஒரு நாட்டின் ஜனநாயகம் காக்கப்பட வேண்டுமானால் அங்கே மக்கள் எழுச்சியில்லாமல், நடைமுறையில் நீதிமன்றம், சட்டமன்றம், பத்திரிகைகள், அரசாங்க யந்திரம் என்ற நான்கு அமைப்புக்களும், பாரபட்சமில்லாமல் செயல்பட வேண்டும். இவைதான் எந்த நாட்டிலும் ஜன நாயகத்தைக் காக்கும் அரசியல் கடிவாளங்கள். அவை நம் நாட்டில் இன்றைய இந்தியத் திருநாட்டில்

செயல்படாத நிலையில்–சட்டம் பெரும்பாலும் மதிக்கப்படாத நிலையில் இருக்கிறது. இதற்கு உறுதுணையாக மற்ற அங்கங்கள் செயல்படும் கேவலத்தைப் பார்க்கிறோம்.

அடுத்ததாக "இளைதாக முள் மரம் கொல்க" என்கிறார் திருவள்ளுவர். துவக்க காலத்திலேயே ஒரு மோசமான தலைவன் நீக்கப்படுவானானால் அது சுலபமாயிருக்கும். மற்றவர்களுக்குப் பாடமாயிருக்கும். மாறாக நம் நாட்டில் மோசமான தலைவர்கள் விஷ விருட்சமாக, வெட்ட முடியாத நச்சு மரங்களாக வளர்ந்துவிடும் வரை அசட்டையாய்–அக்கறை யின்றி வாழ்கிறோம்.

இதனால் என்ன நேரிடுகிறது? மேல்மட்டத்தில் துவங்கும் ஒரு லஞ்சம், பொதுமக்களது பணம் பறிப்பு, என்று–கடைசி மட்டத்தில் உள்ள ஒரு குமாஸ்தா கூட–காசு கொடுத்தால்தான் உங்கள் வேண்டு கோளை மேலே அனுப்புவேன் என்று சொல்லும், மோசமான நிலைக்கு அரசாங்க எந்திரம் வந்து விட்டது. அனைத்தும் ஒரு மோசமான தலைவ னாலும், குறிப்பாக அரசியல் கடிவாளங்கள் செயல்படாததனாலும், பொதுமக்களது கண் காணிப்பும் எழுச்சியும் இல்லாததனாலும்தான் ஏற்படுகிறது.

ஒரு தலைவன் ஒரு நாட்டையே குட்டிச்சுவ ராக்குகிறான். அதுதான் இந்த நாட்டில் கடந்த 30–40 ஆண்டுகளில், கொஞ்சங் கொஞ்சமாக நடந்து உச்ச நிலைக்குப் போயிருக்கிறது.

நாட்டின் தலைமை இப்படிப் போயிருப்பதற்கு மற்றோர் காரணம் படித்த நடுத்தர வர்க்கத்தின் பொறுப்பின்மையுமாகும். பொறுப்பின்மை

என்பதற்குப் பதிலாக ஒரு பொருத்தமான உண்மையான வார்த்தை "சுயநலம்" என்று கூறலாம்.

இந்த நாட்டில் படிக்காத மக்கள்–ஐம்பதாண்டு சுதந்திரத்திற்குப் பின்னும்–இன்றும் 40 சதவிகிதம் இருக்கின்றனர். இவர்களுக்கு நாட்டின் தலைவர்கள் எப்படி சாலை போடுகிறேன் என்று கொள்ளையடிக் கிறார்கள் என்பதோ இந்த நாட்டின் தலைவர்கள் பிற நாடுகளிலிருந்தும் நம் நாட்டு மக்களிடமிருந்தும் எவ்வளவு பணம் கடன் வாங்கிக் காலம் தள்ளு கிறார்கள் என்பதோ அந்தப் பணத்தைப் பத்திரமாக சுவிஸ் வங்கியில் ஐரோப்பாவில் போட்டு வைத்திருக் கிறார்கள் என்பதோ தெரியாது.

அவர்களுக்கு வேண்டியதெல்லாம் படிப்பல்ல– மண்ணெண்ணெய், அரிசி போன்ற அத்தியாவசியப் பொருட்கள். இதைக் கொடுப்பவன் நல்ல தலைவன். அவனுக்கு ஓட்டுப் போடலாம் என்று எண்ணு கிறார்கள்.

இன்றைய நாட்டில் பொதுமக்கள் கொடுக்கும் வரிப்பணம், அமைச்சர்களாலும், அரசாங்க அதிகாரிகளாலும், கட்சிக்காரர்களாலும் பங்கு போட்டுக் கொள்ளப்படுகிறது.

நூறு ரூபாய் வரியாகக் கொடுத்தோமானால் நாட்டுக்காக செலவழிக்கப்படும் பணம் 15 ரூபாய்கூட இல்லை. அவ்வளவு மோசமான நிலை.

இது புரியாத ஏழை மக்கள் கிராமங்களில் வாழ்கிறார்கள். அரசியல் தலைவர்கள் இவர்களை இப்படிப் படிக்காதவர்களாகவே வைத்திருப்பதுதான் தங்களுக்கு நல்லது என்று எண்ணுகிறார்கள். ஆகவே கிராம மக்களுக்கு படிப்பு கொடுத்து அவர்களை

விவரம் தெரிந்தவர்களாக ஆக்குவதில் தலைவர் களுக்கும் அரசியல் கட்சிகளுக்கும் அக்கறை இல்லை.

எனவே இந்த படிக்காத–பணமுமில்லாத 40 சதவிகித மக்கள்தான் ஒரு மோசமான தலை வனையோ தலைவியையோ தேர்ந்தெடுத்து இந்த நாட்டின் தலைவிதியையும், படித்த நடுத்தர மக்களின் தலைவிதியையும் நிர்ணயிக்கிறார்கள். இந்தக் கொடுமையை உணராமல், லட்சியம் செய்யாமல், “என் குடும்பம், என் குழந்தைகள், என் வீடு, என் சுகம், என் வருமானம்” என்று நடுத்தர வர்க்கத் தினர் நடந்துகொள்கின்றனர்.

ஆனாலும் நாட்டின் நிலைமையைப் பற்றி அங்கலாய்ப்பவர்களும் இவர்கள்தான். நாட்டின் நலனுக்காக ஒரு சிறு துரும்பைக்கூடக் கிள்ளிப் போடத் தயாராக இல்லாமல் நாட்டின் நிலைபற்றி வருத்தப்படும் இவர்கள் தெரிந்துதான் செய்கி றார்களா தெரியாமல் செய்கிறார்களா என்பது நமக்குப் புரியவில்லை.

தலைமை என்பதை மற்றோர் கோணத்தில் பார்க்கலாம். ஒரு நல்ல தலைவன் ஒவ்வொரு துறையிலுமுள்ள நிபுணர்களை, அறிஞர்களை தனக்கு ஆலோசகனாக வைத்துக்கொள்கிறான். இதன்மூலம் அவனது தலைமைக்கு ஆபத்து ஏற்பட்டுவிடுவதாக அவன் பயப்படுவதில்லை. தன்னைவிட அவர்கள் அறிந்தவர்கள் என்பதை தலைவன் ஏற்றுக்கொள்கிறான்.

நமது நாட்டில் இப்படிப்பட்ட அறிஞர்களையும் நிபுணர்களையும் கட்சி சார்புடையவர்களா என்று பார்த்து சேர்க்கும் குணம் நிலவுகிறதே தவிர

நாட்டுக்கு நன்மை என்பது முன் வைக்கப்படுவதில்லை.

தமிழ்நாட்டில், எம்.ஜி.ஆர். மேலவையைக் கலைத்தார்.

மேலவை என்பது வெவ்வேறு பிரிவில் உள்ளவர்கள் கட்சிகளுக்கு அப்பாற்பட்டு நிபுணர்களை, சாதனையாளர்களை, அறிஞர்களை அங்கே அனுப்ப வேண்டும். அதன்மூலம் சட்டமன்றத்தின் கட்சி ஆட்சிக்கு நல்ல கருத்துக்கள் போய்ச் சேரும் என்ற எண்ணத்தில் மேலவை ஏற்படுத்தப்பட்டது.

ஆனால் இங்கு மேலவை ஏற்படுத்தப்பட்ட நோக்கம் தோற்கடிக்கப்பட்டுவிட்டது. அதாவது அவர்கள் ஆசிரியத் துறையானாலும் அதில் கட்சி சார்பானவர்களுக்கே இடம் கொடுக்கும் முறை இங்கே புகுத்தி இருக்கிறார்கள், நமது அரசியல் கட்சிகள்.

தலைவர்கள் காலமான பின்னும், நாட்டில் நல்ல ஜனநாயக முறைகள் கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்கிற அக்கறை இல்லை. இதுதான் தலைமை.

முதலாவதாக தலைவர்கள் நாட்டின் தேவை எது என்று தீர்மானிக்க வேண்டும். நம் நாட்டில் ஆரம்பக் கல்விக்கும் உயர்நிலைப் பள்ளிக் கல்விக்கும்தான் முக்கியம் கொடுத்திருக்க வேண்டும்.

அடுத்து அடிமட்டத்து கிராம மக்களது வறுமை ஒழிக்கும் திட்டங்கள் உருவாக்கப்பட்டிருக்க வேண்டும். அதாவது நமது பொருளாதாரம் வலுப்பட நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்க வேண்டும்.

உலகெங்கிலும் பெரிய பெரிய நிறுவனங்கள் ஒரு நாட்டில் ஒரு சிலதான் இருக்க முடியும்; அவையும் வேலையில்லாதவர்களுக்கு 20 சதம் பேருக்குத்தான் வேலை கொடுக்க முடியும். எனவே 80 சதம் பேருக்கு வேலை அளிக்கும் கிராம சிறு தொழில்களில் தலைவர்கள் நாட்டம் செலுத்தி இருக்க வேண்டும். "பொருளாதார ஞான சூன்யங்கள் எல்லாம் தலைவர்களா?" என்ற தலைப்பில் ராணி பத்திரிகையில் ஒரு சில ஆண்டுகளுக்கு முன் ஒரு கட்டுரை வெளிவந்தது. இன்றும் தலைமை அந்த நிலையில்தான் இருக்கிறது.

இரண்டாவதாக தலைவர்கள் சொன்னதைச் செய்பவர்களாக இருக்க வேண்டும். இதன் விளக்கமாக நாம் ஏதும் கூற வேண்டியதில்லை. பாரத ரத்னா திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் கூறியதைக் கூறினால் போதும். "அறிவிப்புக்களே சாதனைகளாகிவிட்டது" என்று ஒரு மேடையில் தலைவர்களை திரு. சி.எஸ். குற்றம் சாட்டினார்.

"அது செய்யப்போகிறோம்; இது செய்யப் போகிறோம் என்று அறிவித்தால் போதும்; யார் இதை எல்லாம் கூர்ந்து நோக்கி செய்தார்களா இல்லையா என்று பார்க்கப் போகிறார்கள்" என்கிற எண்ணத்தில் அரசில் இருப்போர் அநாயாசமாக அறிக்கைகளை வெளியிட்டுக் கொண்டிருக் கின்றனர்.

மூன்றாவதாக தலைவர்களுக்கு திறந்த மனமும் தவறைத் திருத்திக்கொள்ளும் மனப்பக்குவமும் இருக்க வேண்டும் என்பார்கள். "மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணமுண்டு" என்று அண்ணா

சொல்லி இருக்கிறார் என்பவர்கள் என்ன செய்கிறார்கள்?

"நீங்கள் லஞ்சம் வாங்குகிறீர்களா, சொத்து சேர்க்கிறீர்களா என்பதை அறிய பதவியில் சேர்ந்தவுடன் எல்லா அமைச்சர்களுடைய சொத்து விவரங்களை அறிவியுங்கள்" என்று பலமுறை சொன்னோம்; அறிக்கை விட்டோம்.

ஊழல் புரிபவர்கள், இப்படித் தங்களைத் தாங்களாகவே சொத்துப் பட்டியல் கொடுத்து மாட்டிக்கொள்ளவா என்பார்கள்! மாற்றான் தோட்டத்து மல்லிகை எல்லாம் வாய்ஜாலம், அவ்வளவுதான். நாட்டில் நிலவும் தலைமைப் பண்புகளையும் தலைவர் தலைவிகளையும் பார்க்கும்போது நம் நாடு ஒரு நல்ல ஜனநாயகமாக மலர இன்னும் எத்தனை ஆண்டு ஆகும் என்ற கேள்விதான் நம் கண்களில் தண்ணீரை வரவழைக்கும் அளவுக்கு உள்ளத்தைப் பாதிக்கிறது.

சீனாவில் அரசர் லிங் தனது வாரிசாக வேய் என்பவரை நியமித்தபோது அவருக்கு ஆலோசகராக ஒரு படித்த இளைஞர் போனார். அந்த ஆலோசக இளைஞர் தனது குருவிடம் போனார்.

"ஐயா! நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார்.

குரு சொன்னார்: "அந்த அரசனின் வாரிசு சுத்த மட்டமான ஆள். கொடுமையான கொலைகாரன்!" என்றார்.

சீடர் கேட்டார்: "எப்படி இவனை நல்ல குணங்களில் பழக்குவது?"

குரு சொன்னார்: "நல்லா கேட்டே!

அவனை எதுவும் பண்ண முயற்சிக்காதே.

உன்னை அவனுக்கேத்தாப்பிலே பண்ணிக்க" என்றார்.

அதுபோல இன்றைய நாடு குறிப்பாக நடுத்தர வர்க்கம் தன்னை "சரிப்பண்ணிக் கொண்டு" வாழ்ந்து வருகிறது!

இத்தகைய அவநம்பிக்கையுடன் எனது முன்னுரையை முடிக்க விரும்பவில்லை. ஏனெனில் முன்னுரையின் மாற்றத்திற்கு மக்கள் என்ன செய்ய வேண்டுமென தெளிவாக எழுதி இருக்கிறேன். இதற்கும் ஒரு தலைமை, புதிய தலைமை, புதிய பாரம்பரியத்தில் பிறந்த தலைமை தேவைப்படுகிறது.

நம்மிடம் அதுவும் மாணவ சமுதாயமாக இருக்கிறது. எனவே மாணவர்களிடம் சொல்வோம்; மாணவர்களை உருவாக்குவோம்.

வாழ்க பாரதம்!

**எம்.எஸ். உதயமூர்த்தி**

# பொருளடக்கம்

## ஆசிரியரின் பிற நூல்கள்

| | |
|---|---|
| எண்ணங்கள் | 25–00 |
| ஜேம்ஸ் ஆலனின் வாழ்க்கையை அமைக்கும் எண்ணங்கள் | 24–00 |
| வெற்றிக்கு முதல் படி | 27–00 |
| உலகால் அறியப்படாத ரகசியம் | 27–00 |
| சாதனைக்கோர் பாதை | 18–00 |
| சிந்தனை தொழில் செல்வம் | 35–00 |
| உயர்மனிதனை உருவாக்கும் குணங்கள் | 20–00 |
| தன்னம்பிக்கையும் உயர் தர்ம நெறிகளும் | 32–00 |
| மனம் பிரார்த்தனை மந்திரம் | 34–00 |
| பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எப்படி? | 32–00 |
| நம்மால் முடியும் தம்பி நம்பு! | 30–00 |
| மனித உறவுகள் | 27–00 |
| நெஞ்சமே அஞ்சாதே நீ | 20–00 |
| தட்டுங்கள் திறக்கப்படும் | 20–00 |
| ஆத்ம தரிசனம் | 15–00 |
| சொந்தக் காலில் நில் | 30–00 |
| நாடு எங்கே செல்கிறது? | 35–00 |
| நீதான் தம்பி முதலமைச்சர் | 28–00 |
| வெற்றி மனோபாவம் | 22–00 |
| என்னைச் செதுக்கிய எண்ணங்கள் | 100–00 |

# தலைவன்

தனி மனிதனைத் தலைவனாக மாற்றும் எண்ணங்களையும் சம்பவங்களையும் சூழ்நிலைகளையும் பற்றிப் பெரிதும் நான் சிந்திப்பதுண்டு. சம்பவங்கள் மனிதனை உருவாக்குகின்றன என்று எண்ணுவதற்குப் பதிலாக, மனிதன் தன் எண்ணங்களால், விடாமுயற்சியால் சம்பவங்களை உருவாக்கி உயர்கிறான் என்று கருதுபவன் நான். அந்த நோக்கில் மனிதர்களை, தலைவர்களை, அவர்களது குணநலன்களைக் கூர்ந்து கவனிப்பது உண்டு. நமது தலைவர்களைச் சரித்திரப் பின்னணியில் வைத்து 'எங்கே இடம் பெறுவார்கள் இவர்கள்?' என்று யோசிப்பதுண்டு. பிற நாட்டுத் தலைவர்களுடன் ஒப்பிட்டுப் பார்த்துப் பெருமைப்படுவதுண்டு; அதேசமயம் கண்ணீர் விடுவதுமுண்டு. அவர்களது படிப்பையும், பண்பையும் வளர்ந்த விதத்தையும் எண்ணிப் பார்த்து ஊக்கமடைவதுண்டு; அனுதாபப்படுவதுமுண்டு.

இதன் விளைவாக ஒரு லட்சியத் தலைவனைக் காண ஆசைப்பட்டேன்; தேட முயன்றேன். லட்சியத் தலைவனின் பண்பும், பாங்கும், சாமர்த்தியமும் சாகசமும் என் கண்முன் ஒரு நாடகமாக விரியத் துவங்கின. தனி மனிதனிலிருந்து தலைவன் என்ற

பெருமனிதனாக ஒரு மனிதன் மாறும்போது எந்தவிதமான எண்ண ஓட்டங்கள் அவனை அப்படி மாற்றுகின்றன என்பதை விளக்குவதுதான் எனது—இந்த எண்ணத் தொடர்.

எண்ணங்கள்... பற்றி எழுதித் தங்கள் அன்பையும் பாராட்டுக்களையும், தெரிவித்த நூற்றுக்கணக்கான வாசகர்களுக்கு என் உளமார்ந்த நன்றி.




வெளிநாட்டு அறிஞர்கள் 'இந்தியர்கள் புத்தி சாலிகள்; கல்வியைப் பேணும் பழக்கம் பரம்பரையாக அவர்களுடன் தொடர்ந்து வருகிறது' என்று எழுது கிறார்கள். நமது இலக்கியச் செல்வங்களையும், சரித்திரச் சின்னங்களையும் பார்க்கும்போது நம்முள் ஒரு பெருமையும் பூரிப்பும் ஏற்படுகிறது. ரத்தம் சிந்தாமல் கத்தி ஏந்தாமல் சூரியன் அஸ்தமிக்காத பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை வெளியேற்றிய பெருமையை நமது தேசத் தந்தை காந்தி சாதித்தார்.

அடிக்கடி நமது தலைவர்களைப் பற்றி நான் சிந்தித்துப் பார்ப்பதுண்டு. பதவியில் இருப்பவர்களும் சரி, பதவியில் இல்லாதவர்களும் சரி—அசாதாரணத் திறமையும், நல்லெண்ணமும், நல்ல நோக்கமும் கொண்ட மகத்தான மனிதர்களாகவே எனக்குப் பட்டார்கள். ஒரு சமயம் அமெரிக்காவின் மிக முக்கிய பத்திரிகையான வால் ஸ்டிரீட் ஜர்னல் 'இந்தியாவின் அவதியும், போராட்டமும்' என்ற தலைப்பில் இரு

கட்டுரைகளை வெளியிட்டது. அதில் நம் நாட்டின் நிலைமையைப் படம் பிடித்திருந்தார்கள்—வேலை யில்லாத் திண்டாட்டம், பற்றாக்குறை, ஏழைமை என்ற துயரம் தரும் செய்திகள்—அவர்கள் ஒன்றும் இல்லா ததைச் சொல்லிவிடவில்லை. எனினும் கடைசியில் குறிப்பிட்டிருந்தார்கள்: 'இந்தியாவின் பிரச்சினைகள் சரியான தலைமயில்லாத குறையினால் விளைந்தவை. சரியான வழி காட்டுவோர் அங்கு இல்லை' என்று கட்டுரையை முடித்திருந்தார்கள்.

நான் மீண்டும் சிந்தித்தேன். எனது அறிவை உணர்ச்சி மேற்கொண்டது. நமது நாட்டின் மகத்தான தலைவர்களை இவ்வளவு எளிதாகக் கூறிவிட்டுப் போய்விட்டார்களே என்ற ஆதங்கம் என் பேனாவை ஓட்டியது. நான் அவர்களை விட்டுவிடுவதாக இல்லை.



"இந்தியாவின் குறை, தலைவர்களில்லாத குறை" என்று குறிப்பிட்டிருந்தீர்கள். அது தவறான மதிப்பீடு. அமெரிக்க செனட்டர் பர்சி கூறியது போல திறமையும் உறுதியும் படைத்த ஓர் அம்மையார் இந்தியாவை ஆளுகிறார். கடந்த சுதந்திர தின விழாவில் இந்திரா காந்தி கூறினார், 'கடந்த 25 ஆண்டுகளில்—இரண்டு துறைகளில் நாம் ஒன்றும் செய்யாமல், முன்னேறாமல் இருந்துவிட்டோம். அவை ஒன்று, நிர்வாகம், இரண்டாவது, கல்வி' என்று.

"ஜபர்தஸ்து நிறைந்த நிர்வாக அமைப்பு, முன்னேற்றத்தின் முட்டுக்கட்டையாகத் திட்டங்களின் பயன் மக்களை அடைய முடியாது தடுக்கிறது. இந்தியத் தேவைகளுக்கேற்ப அமைக்கப்படாத கல்வி, புத்தகக் கல்வியாய்ப் போய், வாழ்க்கைக்கு வழிவிடத் தவறிவிட்டது. இரண்டாயிரம் ஆண்டு பரம்பரை கொண்ட பழக்க வழக்கங்களும், இங்கிலாந்தின் இருநூறாண்டு ஆட்சியும் இன்னும் சுமையாக நாட்டை அழுத்திக் கொண்டிருக்கின்றன.

"ஃபோர்ட் மோட்டார் கம்பெனி கஷ்ட நிலையில் இருந்தபோது, அதன் தலைவர் ஹென்றிபோர்டு திறமைமிக்க ராபர்ட் மக்நாமாரா போன்ற மனிதர்களைக் கம்பெனிகளில் போட்டார். சில ஆண்டுகளில் ஃபோர்டு கம்பெனி லாபகரமாக இயங்கத் துவங்கியது. அதேபோல் ஒரு நாட்டின் முன்னேற்றத் திற்குத் தேவை நல்ல தலைவர்கள். இந்தியாவில் நல்ல தலைவர்கள் இருக்கிறார்கள். நிறைய புத்திசாலிகள் இருக்கிறார்கள்.

எங்கள் நாட்டுத் தலைவி எந்தவிதமான கிஸ்ஸிஞ்சரின் உதவியும் இல்லாமல், இந்தியா, பாகிஸ்தான், பங்களாதேஷ் தலைவர்களை ஒன்றுகூட்டி ஒரு சமாதான உடன்பாட்டுக்கு வந்ததை நீங்கள் படித்திருப்பீர்கள்" என்ற கருத்துக்களைப் பதிலாக எழுதினேன். இது ஓராண்டுக்கு முன்பு.

பங்களாதேஷ் பிரச்சினை முடிந்தவுடன் நாடு பொருளாதாரத் துறையில் கீழ் நோக்கிப் போக ஆரம்பித்தது. விலைவாசிகள் ஏறின. அரசியலில் டெல்லியிலும் சரி, மாநில அளவிலும் சரி, நீதிக்குப்

புறம்பான நெறிமுறைகளும், லஞ்ச ஊழல்களும் மலிந்ததைக் காணும் துர்ப்பாக்கியம் நேரிட்டது.

'உண்மையில் நாடு எங்கே போகிறது? ஜனநாயகம் எங்கே போகிறது? நமது தலைவர்கள் சுயநலவாதிகளா? அல்லது கண்டும் காணாமல் இருக்க விரும்பும் வேதாந்திகளா? அவர்கள் அறிவும் திறமையும் பெற்றவர்கள் என்றால், ஏன் இப்படியொரு நிலை நாட்டில் நிலவுகிறது? பொருள் உற்பத்தியில், கிராம வாழ்க்கையில் அக்கறை காட்டாது, ஏதோ எல்லா வற்றிற்கும் அரசாங்கத்தை எதிர்நோக்க வைக்கும் நம் தலைவர்கள் உண்மையிலேயே நல்ல முடிவுகளைத் தான் எடுக்கிறார்களா? 24 மணி நேரமும் அரசியலைத் திருவிழாவாக்கி மகிழும் ஆளும் கட்சியும் எதிர்க் கட்சியும் அதன் தலைவர்களும் எல்லாம் தெரிந்துதான் செய்கிறார்களா?"

—என்பன போன்ற கேள்விகள் என்னுள் எழுந்த வண்ணம் இருந்தன. நல்லவர்களைப் பாராட்டினால் தான், அவர்கள் ஊக்கமும் உற்சாகமும் பெற்று மேலும் நல்ல காரியங்களைச் செய்வார்கள் என்று எண்ணு பவன் நான்.

இந்நிலையில் 'எல்லோரும் அகப்பட்டதைச் சுருட்டுபவர்கள்' என்று சில படித்தவர்கள் கூறினார்கள். 'அவர்கள் கூற்று அதிர்ச்சியாக இருந்தாலும், உண்மை யாக இருக்காது' என்று சமாதானம் செய்துகொண் டேன். வயதும் பண்பும் நிறைந்த 'குமுதம்' பத்திரி காசிரியரைச் சென்னையில் கண்டேன். மாறுபட்ட கருத்துக்களைத் தெரிவித்ததற்காக தி.மு.க. கட்சிக் காரர்களால் அவர் அலுவலகம் கல்லடி பட்ட கதை

யைக் கூறி மூலையில் குவித்திருந்த கற் குவியலையும் காட்டினார்.

தலைவர்கள் எப்படி உருவாகிறார்கள்? எத்தகைய நெருக்கடிகளில் வாழ்கிறார்கள் என்ற எண்ணங்கள் என் மனத்தில் தோன்ற ஆரம்பித்தன. அவர்கள் வளர்ந்த விதமும், பட்ட அனுபவங்களும், அவர்கள் எடுக்கும் முடிவுகளை எந்தவிதத்தில் பாதிக்கின்றன என்று சிந்திக்க ஆரம்பித்தேன்.

நேரு தனது பதினேழு ஆண்டுகளில் எத்தனையோ தவறுகளைச் செய்தார். ஆனால் பார்லிமெண்டரி ஜன நாயகத்தைப் போற்றிப் பாதுகாத்தார். சர்வாதிகாரி யாகி எதிரிகளைச் சிறையில் போட்டிருக்கக்கூடிய செல் வாக்கை எந்த நேரமும் பெற்றிருந்த நேரு, ஜனநாயகப் பண்புகளை வளர்த்தார். 'அரசு பொது மக்களது வரிப்பணத்தால் நடத்தப்படுவது. அது பொதுச் சொத்து' என்ற தூய்மையைப் பண்பாக நிலைநாட்டினார்.

இன்றோ, ஒரு தலைவர் கூறுகிறார்: "ஒரு திட்டத்தில் பணம் செலவழித்தால் அதில் பத்து சதம் 'வாங்'கிக் கொள்வதில் தவறென்ன?" என்று. 'தலை'யைக் கொண்டு வருகின்ற பேச்சுக்கள்! பண்புக் குறைவான வாசகங்கள், சட்டமன்றத்தில்! இவர்கள் மக்களின் பிரதிநிதிகள், தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்!

ஓமந்தூரரார், ராஜாஜி போன்ற தலைவர்கள் இருந்தபோது நிகழ்ந்த கண்ணியமான மரபுகள் என் நினைவுக்கு வந்தன.

'அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்' என்ற பழமொழி நினைவுக்கு வருகிறது. ஏதோ சில தனிப்பட்ட

மனிதர்கள் செய்யும் குறைபாடுகளைத் தலைவன்மீது சுமத்துவது தர்மமாகாது. எனினும் பண்பும் நேர்மையும் இல்லாத ஒரு தலைமை, வஞ்சமும் சர்வாதிகாரமும் கொண்ட ஒரு தலைமை, நாட்டின் பொது நீரோட்டமாகி தங்கள் கீழ்த்தரப் பண்புகளை நாட்டில் பரப்பத் தொடங்கிய கொடுமையைக் காண முடிந்தது.

ஆங்கிலத்தில் 'செயல், செயல் தூண்டும் மறு செயல் (Action and Reaction) என்பார்கள். நாம் நமது எண்ணங்களை உயரே வைக்காமல், மேலே நோக்காமல் ஒருவன் கீழ்ச்செயல் புரியவும் அதைக் காரணம் காட்டி, மற்றவன் மற்றொரு கீழ்ச்செயல் புரிவதும் ஒரு தொடர் சங்கிலியாக வளர்ந்துவிட்ட நிலையில் இருக்கிறோமோ என்று சந்தேகிக்கிறேன். அரசியலில் பண்புகள் குறைந்து ஒரு கேவலமான நிலை ஏற்படுமானால், அது யாரைப் பிரதிபலிக்கும்? அது எங்கே போய் முடியும் என்ற எண்ணங்களே, ஒரு லட்சியத் தலைவனைப் பற்றி என்னைச் சிந்திக்க வைத்தன; இத்தனை நாள் வாழ்ந்து வழிகாட்டிய தலைவர்களின் செயல்களைச் சீர்தூக்கிப் பார்க்கச் செய்தன. பிற நாடுகளின் தலைவர்களையும் அவர்களது வாழ்க்கையை வகுத்த சம்பவங்களின் தன்மையையும் படிக்குமாறு தூண்டியது. ஒரு சரித்திர மனோபாவம் தலைவனுக்கு எழும்போது அவன் உயர்கிறான்; சரித்திர புருஷனாக மலர்கிறான் என்ற உண்மையை அங்கே கண்டேன்.

சரித்திர அறிவு நம்மை உயர்த்தட்டும். சரித்திரத்தில் நம்மை வாழச் செய்யும் தகுதி படைத்த மனிதர்களாக்கட்டும்.

# தலைவன் என்ற இயக்கம்



## 2

எண்ணங்களுக்கேற்ப மனிதன் வளருகிறான். ஒரு நாட்டில் நிலவும் எண்ணங்களுக்கேற்ப ஒரு சமுதாயம் மலர்கிறது. புதிய எண்ணங்களையும் லட்சியங்களையும் உருவாக்கி, ஒரு தலைவன் ஒரு சமுதாயத்தைப் புதிய உலகை நோக்கி அழைத்துச் செல்கிறான்; அல்லது மக்களின் அபிலாஷைகளுக்கு ஏற்ப மக்களால் நடத்திச் செல்லப்படுகிறான். 'மக்கள் இதைத்தான் விரும்புகிறார்கள். அவர்களின் ஆசைகளைத்தான் நான் பிரதிபலிக்கிறேன்' என்று சொல்லி மக்களால் நடத்திச் செல்லப்படுபவர்களும் தலைவர்கள்தான். மக்களுக்கு வழிகாட்டி அவர்களை உலுக்கி எழுப்பி முன்னே நடத்திச் செல்லும் தீர்க்கதரிசிகளும் தலைவர்கள்தான். பின்னவர்கள் சரித்திரத்தில் வாழ்கிறார்கள்.

தலைவர்கள் 'பிறப்பதாகக்' கூறுகிறார்கள். நேற்றுவரை சாதாரண மனிதனாயிருந்தவன், சூழ்நிலையால், தன் சுய வளர்ச்சியால், மக்களால் தலைவனெனப் போற்றப்படுகிறான்; 'மேதை' என்று பாராட்டப்படுகிறான். பிறக்கிறானா? இல்லை

உருவாக்கப்படுகிறான். —தன்னைத்தானே (காலத்தை உணர்ந்து) உருவாக்கிக் கொள்கிறான்.

தலைவன் எங்கேயிருந்து வருகிறான்? தனிமனிதன் தலைவனாக மாறும் அந்த அசாதாரண கருமாற்றம் எப்படி நடைபெறுகிறது? எந்த நேரத்தில் தலைவன் தோன்றுகின்றான்? லட்சோப லட்சம் மக்களை தான் சொல்கிறபடி கேட்க வைக்கும் மந்திர சக்தியை அவன் எங்கிருந்து பெறுகிறான்? தலைவர்கள் சம்பந்தப்பட்ட சில சம்பவங்களைப் பார்ப்போம்.

இரவு மணி பத்து, இடம் சென்னைக் கடற்கரை. சைதாப்பேட்டை சிறையிலிருந்து விடுவிக்கப் பெற்றபின் முதன்முறையாக அண்ணா பேசுகிறார். அண்ணாவைச் சிறையில் போட்டதைக் கண்டு கோபம் கொண்ட மக்கள், அவர் பேசுவதைக் கேட்க ஆர்வத்துடன் உட்கார்ந்திருக்கிறார்கள். கண்ணுக்கெட்டிய தொலைவு வரை மக்கள் கூட்டம். அண்ணா பேசுகிறார். "அண்ணாத்துரை மக்கள் கூட்டத்தை வளர்த்து விட்டான். கட்டுப்பாட்டை வளர்க்கவில்லை என்று கூறுகிறார்கள். நீங்கள் உங்கள் கட்டுப்பாட்டைத் தெரிவிக்கும் வகையில் உங்கள் இடத்திலிருந்து எழுந்து நில்லுங்கள்" என்கின்றார். பின்னே இருக்கும் வங்காளக் கடலின் ஆர்ப்பரிக்கும் அலைகள் பின்னோடும் வண்ணம் மக்கள் அலை எழுகிறது; "அமைதியாக உட்காருங்கள்" என்கிறார் அடுத்து. மந்திர சக்திக்கு வசப்பட்ட பாம்பு, பெட்டிக்குள் அடங்குவது போல கூட்டம் அமைதியாக அமருகிறது. நமது உள்ளம், உடல், ஆத்மா எல்லாமே சிலிர்த்தெழுகிறது. அப்படியோர் மந்திர சக்தி அண்ணாவுக்கு.

நேருவுக்குப் பின் யார் இந்தியாவை நடத்திச் செல்வார்கள் என்ற சந்தேகம், பயம் அனைத்தும், வெளிநாட்டவரை மட்டுமல்ல இந்தியரையும் ஆட்டிப் படைத்த நேரம். நேரு காலமாகிவிட்டார். மொரார்ஜி தேசாய், நந்தா, சவான், டி. டி. கே., சி. சுப்பிரமணியம் என்று பல பெயர்கள் அடிபடுகின்றன. தனது சக தலைவர்களது ஒப்புதலைப் பெற்று சுமார் 500 பார்லிமெண்ட் அங்கத்தினர்களையும் சந்தித்து, லால்பகதூர் சாஸ்திரியைப் பிரதமராக்குகிறார், காமராஜ். நாட்டின் நெருக்கடி மிகுந்த நேரத்தில் தோன்றிய தலைவன் யார்? சாஸ்திரியா? அல்லது சாஸ்திரியை நியமித்த காமராஜரா?

சாஸ்திரி இறந்துவிடவே பிரதமர் பதவிக்கு மீண்டும் நெருக்கடி ஏற்படுகிறது. தனது சக 'சிண்டிகேட்' மெம்பர்கள் இப்போது பிளவுபட்டிருக்கிறார்கள். காமராஜ், மாநில முதலமைச்சர்களை அழைத்து அவர்களையோர் அணியாக அமைத்து அவர்களது ஏகோபித்த பிரதிநிதியாக இந்திராவை ஏற்றுக்கொள்ளச் செய்கிறார். காமராஜரின் சாணக்கியத்தின் எல்லை கண்டு வெளிநாட்டுத் தூதுவர் வசிக்கும் புதுடெல்லி யின் சாணக்கியபுரியே வியக்கிறது.

நாட்டின் நெருக்கடி மிகுந்த நேரத்தில் நம்பிக்கை தந்து, அமைதியை ஒழுங்கை நிலைநாட்ட நிலை மையைச் சமாளிக்க—ஒரு தலைவன் பிறக்கிறான்.

தொழிலதிபர் எம். ஏ. சிதம்பரம், 'ஸ்பிக் நகர்' என்ற கற்பனையும் துணிவும் மிக்க, ஆயிரக்கணக்கான மக்களுக்கு வாழ்வு அளிக்கும் ஓர் உரத்தொழிற்சாலை பற்றித் திட்டம் வகுக்கிறார். ஸ்ரீவத்ஸா போன்ற திறமைசாலிகளைக் கொண்டு வருகிறார். தமிழ்நாட்டில்

மத்திய மாநில அரசுகளின் பொருளுதவி கொண்டு வாழ்வு தரும் ஒரு புதிய தொழிலமைப்பு உருவாகிறது. பல மனிதர்களையும் பல ஸ்தாபனங்களையும் தன் திறமையால் நிர்வகித்து, நாட்டுக்கு வாழ்வளிக்கும் சிதம்பரம் போன்றோரும் தலைவர்கள்தான்.

அருள்மிகு கருணையால் அன்பையும் சாந்தத்தையும், அமைதியையும் பரப்பும் காஞ்சிப் பெரியவர் அதோ நிற்கிறார். அங்கே ஆடம்பரமில்லை; வெறும் குடில்தான் இருக்கிறது. அதிகாரம் இல்லை; வெறும் புன்னகைதான் புறப்படுகிறது. அவர் பேசாமல் பேசுகிறார். மக்கள் அதைக் காதால் கேளாமல் உணர்கிறார்கள். அங்கே என்ன நிகழ்கிறது?

அவரும் தலைவர்தான்.

திருவெண்காட்டு சுப்ரமணிய பிள்ளை மகுடி வாசிக்கும்போது, மக்களும், இரவும், உலகமுமே மயங்குகின்ற நிலை. நாதசுர இசை உலகில் அவர் ஒரு 'தலைவன்'.

இவர்கள் அனைவரிலும் பொது வாழ்வில் ஈடுபடும் தலைவர்களே நாட்டின் விதியை, மக்கள் சமுதாயத்தின் எதிர்காலத்தை நிர்ணயிப்பவர்களாக இருக்கிறார்கள்.

ஒரு சமுதாயம், அப்பழுக்கற்ற ஓர் உதாரண புருஷனைத் தலைவனாக உருவாக்கி பின் தலைமையேற்கச் செய்து தங்கள் பொது வாழ்வை அமைத்துக் கொள்வதில்லை. ஏதோ இருக்கும் தலைவர்களைத்தான் அவர்களது திறமைகளுக்கு ஏற்ப நல்ல குணங்களுக்கேற்ப தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. அந்தந்த தலைவர்களும், அவர்கள் வளர்ந்த

விதத்திற்கேற்ப, அனுபவத்திற்கேற்ப பிரச்சினைகளைக் கையாளுகிறார்கள்.

சாதாரணப் பிரஜைகளாகிய நாமும் நம் வாழ்வில் நெருக்கடி மிகுந்த சம்பவங்களைச் சந்திக்கிறோம்; சமாளிக்கிறோம். நமக்கும் நம் வீடு, நம் தெரு அல்லது நமது அலுவலகம், நண்பர் குழாம் என்று ஓர் அமைப்பு இருக்கிறது.

பின் எப்படி ஒருவர் காந்தியாகிறார், நேருவாகிறார், காமராஜராகிறார்? மற்றவர்கள் சாதாரண பிரஜைகளாக வாழ்க்கையை நடத்துகிறார்கள்?

சாதாரண குடிமகனிடமும் காந்தியத்தின் உண்மை, நேருவின் நேர்மை என்று எல்லாத் தலைமைக் குணங்களும் பெரும்பாலும் இருக்கின்றன. ஆனால் தலைவர்களோ, தங்கள் வாழ்வில் திரும்பத் திரும்ப காந்தியாகிறார்கள்; தொடர்ந்து காந்தியாகிறார்கள். மற்றவர்களோ வாழ்க்கையில் ஓரிருமுறை காந்தியாகிறார்கள். அவ்வளவுதான்.

மனிதன், மக்கள், காலம் என்ற மூன்று சக்திகளின் ஒன்று சேர்ந்த இயக்கமே தலைவனை உருவாக்குகிறது என்கிறார் ஹார்வார்டு பல்கலைக் கழகப் பேராசிரியர் எரிக் எரிக்சன்.

பெரும் லட்சியங்களுக்காக வாழும் ஒரு மனிதன் தனிமனித நிலையிலிருந்து தலைவனாக உயர்கிறான். "அவன் கூறும் யோசனை சரியான யோசனை; அவன் காட்டும் பாதை சரியான பாதை" என்று நம்பி, அதற்காகத் தியாகம் செய்ய வருகிறது தொண்டர் கூட்டம். ஒரு நாடோ, சமுதாயமோ இருக்கின்ற நிலையில் அவதிப்பட்டு, சோதனையில் சிக்குண்டு,

'விடிவெள்ளி தெரியாதா? தலைவன் வருவாரா?' என்று எதிர்நோக்கியிருக்கும் காலச் சூழ்நிலை, இவற்றின் இயக்கம்தான் தலைவன்.

மக்களின் உயிருக்கும் உடைமைக்கும் ஆபத்து ஏற்படும்போது தலைவன் தோன்றுகின்றான். 'ஏதோவொரு வாழ்க்கை' என்று உழன்று கொண்டிருக்கும்போது தன்மானத்தைத் தோற்றுவிக்க ஒரு தலைவன் பிறக்கிறான். பழையன கழிதலும் புதியன புகுதலும் என்ற நிலையில் சமுதாய அமைப்புக்கள் மாறுபடும்போது மக்கள் அச்சம் கொள்கிறார்கள். அப்போது ஒரு நெறியை அமைக்க தலைவன் தோன்றுகிறான். "உங்களைக் காப்பாற்றுவோம்", "நமது பரம்பரையை நிலைநாட்டுவோம்", "பாதுகாப்புத் தரும் நெறிமுறைகளை அமைப்போம்" என்ற மூன்று காரணங்களுக்காகச் சரித்திரத்தில் மாபெரும் தலைவர்கள் தோன்றியிருக்கிறார்கள்.

காந்தியும், நேருவும், பெரியாரும், காமராஜரும், அண்ணாவும் எப்போதும் எல்லா நாட்டிலும் பிறந்து விடுவதில்லை. அவர்களெல்லாம் சிறந்த தனிமனித குணங்களாலும், தொண்டர் படையாலும், காலச் சூழ்நிலையாலும் உருவானவர்கள். அதே சமயம் காலச் சூழ்நிலையை உணர்ந்து தங்களைக் கொஞ்சங் கொஞ்சமாக வளர்த்துக்கொண்டு தங்கள் வாழ்க்கையைத் திட்டமிட்டு, தலைவனாக மாறியவர்கள்.

அவர்களிடமிருந்து நாமும், நமது இன்றைய தலைவர்களும் கற்றுக்கொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கிறது.




# 3

தலைவர்கள் என்னும்போது, நாமெல்லோரும் நமக்கு அறிமுகமான, பொது வாழ்வில் ஈடுபட்டவர் களையே சிந்திக்கிறோம். சமுதாயத்தின் பல மட்டங் களிலும் பல தலைவர்கள் எண்ணங்களால் கனிந்து கொண்டிருக்கிறார்கள். சந்தர்ப்பமும், சூழ்நிலையும் சில சமயம் உதவுகின்றன. அப்படி வாய்க்கும் போதும் அவர்களது தன்னலமற்ற மகத்தான லட்சியங்கள் மட்டுமே அவர்களை வேறுபடுத்திக் காட்டும். அப்படிக் காட்டியபோதும், தன்னை சூழ்ந்திருப்போரிடம் அந்த உற்சாகத்தை எழுப்ப முடியாதபோது மனிதன் தலைவனாவதில்லை.

தலைவர்களில் இரண்டு வகை உண்டு. ஒருவர் தன் லட்சியத்தால் தானே முன்னுக்கு வந்த தலைவர். மற்றவர் பிறரால் தலைமைக்கு அழைக்கப்பட்டவர். பிறரால் இப்படிக் கண்டெடுக்கப்படுபவர்களுக்கு இருக்கும் தலைமைப் பதவி நிரந்தரமானதல்ல. உதாரணம் கிருஷ்ணமேனன். மற்றும் அமைச்சரவையில் அழைக்கப்பட்டுப் பின் நாமமில்லாது போன பல மனிதர்களும், தலைவனுக்குத் தேவையான குணங்

களால் வளரமுடியாது போனவர்கள்தான். பொதுவாக, இவர்கள் சார்ந்து வாழ வேண்டியவர்கள்; தங்களுக்கிருக்கும் சுய திறமையை நம்பி வாழ வேண்டியவர்கள்; மக்கள் ஆதரவை அல்ல.

இது அல்லாமல், பதவிக்கு வரிசையான ஏணிப் படியில் ஏறி, சீனியாரிட்டி மூலம் முக்கிய பதவிக்கு வந்தவர்களும் தலைவர்கள்தான். தலைமைக் காரியதரிசி பதவி, தலைமைப் போலீஸ் பதவி, கார்ப்பரேஷன் கமிஷனர் பதவி என்று பல பதவிகளில் பிறரை நிர்வகிக்கும் பல தலைவர்கள் இருக்கிறார்கள்.

சி. டி. தேஷ்முக்கும், இந்திய சமஸ்தானங்களை ஒருங்கிணைத்த வி. பி. மேனனும் இந்த வகையைச் சேர்ந்த தலைவர்கள்.

சில சம்பவங்கள் திடீரென்று சில பேருக்கு முக்கியத்துவத்தையும், தொண்டர் கூட்டத்தையும், சரித்திரத்தில் இடத்தையும் பிடித்துக் கொடுக்கும். உதாரணம், ஆந்திர மாநிலப் பிரிவினைக்காக உண்ணாவிரதம் இருந்து உயிர்நீத்த பொட்டி ஸ்ரீராமுலு; கோவை விவசாயிகள் சங்கத் தலைவர் நாராயணசாமி நாயுடு. வன்னியர் சங்கத் தலைவர் ராமதாஸ்.

இதுவன்றி தலைவர்களை இரு பெரும் பிரிவாகப் பிரிக்கிறார்கள், அரசியல் அறிஞர்கள். அதாவது காந்த சக்தி (Charismatic Leaders) படைத்த சரித்திர புருஷர்கள் என்றும், தேவையை நிரப்ப வரும் ஆட்சித் தலைவர்கள் என்றும் (Routine Leaders).

காந்தியையும், நேருவையும், லெனினையும், சர்ச்சிலையும், பெரியாரையும், அண்ணாவையும், எம். ஜி. ஆரையும் இந்த வகையில் சேர்க்கலாம்.

அவர்களிடம் எல்லாம் இனம் புரியாத ஒரு கவர்ச்சி இருந்தது. மக்கள், தொண்டர்கள், ஆண்கள், பெண்கள், வயோதிகர், வாலிபர் என்று எல்லோரும் அவர்களது அன்புப் பிடியில், சொல்லின் மந்திர சக்தியில் கட்டுண்டார்கள். தாங்களாகச் செய்ய விரும்பாததைத் தலைவனுக்காகச் செய்ய அவர்கள் சித்தமாயிருக் கிறார்கள். 'அரை நிர்வாணப் பக்கிரி' என்று சர்ச்சிலால் இகழ்ந்துரைக்கப்பட்ட காந்தியின் தரிசனத்தைத் தெய்வ தரிசனமாக மக்கள் கண்டார்கள். இந்திய அரங்கில் தோன்றிய கவர்ச்சி மிக்க இளவரசனாக நேருவை மக்கள் கருதினார்கள்; அவர் பேச்சைக் கேட்கக் கூடினார்கள். "யார் அணிந்தாலும் வடநாட்டுப் பனியா போல் தோன்றும் அந்தக் குல்லாய், நேரு அணிந்ததும் ஓர் இளவரசனின் தலையில் ஏறிய அழகைப் பெறுகிறது" என்று புகழ்ந்தார் ஒரு பிரிட்டிஷ் பார்லிமெண்ட் அங்கத்தினர். பெரியாருக்கிருந்த வெண்தாடியும் கறுப்புச் சட்டையும், அவர் வயதும் "இதோ நமது கிராமத்துப் பெரியவர், நல்லவர், துணிச்சல்காரர்—நமக்காகப் பேசுகிறார்" என்ற உறவை உடனே ஏற்படுத்தின. அண்ணாவின் குள்ள உருவமும், சிறு தொந்தியும், அவர் பேச்சு தந்த போதையும் காற்றில் மிதந்து எல்லோரையும் சுண்டி இழுத்தன. பல தலைவர்களுக்கிருக்கும் வசீகர சக்தியை ஆராய்ந்து, எடுத்து, தனியே வைத்து, "இதுதான் காரணம்" என்று கூறிவிட முடியாது. இதன் காரணமாகவே மாபெரும் தலைவர்களின் கவர்ச்சியை "ஓர் இனம் புரியாத ஆழ்ந்த ஈடுபாடு" என்று அறிஞர்கள் வருணிக்கிறார்கள்.

நேரு வெளிநாட்டுக் கல்வி பயின்றவர். சமூகத்தின் மேல் மட்டத்தில் வளர்ந்தவர். எனினும் மேடைக்கு

வந்ததும் "இவர்கள் என் மக்கள்; இது என் நாடு" என்ற பேருணர்வு அவரை ஈடுபடுத்துவதாக அவர் எழுதியிருக்கிறார். அந்த எண்ணமே எல்லோரையும் அப்படியே வளைத்துப் போட்டுவிடுகிறது போலும்!

"இரண்டு மணி நேரம் பேசினீர்களே, களைத்துப் போயிருப்பீர்கள்" என்று அண்ணாவிடம் கூறியபோது, "இல்லை. இப்போதுதான் எனக்குப் புத்துணர்ச்சி ஏற்படுகிறது" என்றார். எங்கே இருந்து வருகிறது இந்த மகத்தான சக்தி? மக்களிடமிருந்து கிளம்பி தலைவனை நோக்கி ஓடுகிறதா?

காந்தியின் பொக்கைவாய்ச் சிரிப்பைப் பற்றி எத்தனை கவிஞர்கள் பாடியிருக்கிறார்கள்? அவரோ வயதானவர்; தலையோ மொட்டை; வாயோ பொக்கை. எனினும் அங்கே ஒரு காந்த சக்தி! நாம் மனத்தைப் பறி கொடுக்கிறோம். சட்டை போடுவதில்லை; சில சமயம் அவர் பேசுவதுகூட இல்லை; மௌன விரதம் அனுஷ்டிப்பார். அங்கே லட்சியங்களைக் காண்கிறோமா? வாழ்க்கை நெறியினைக் காண்கிறோமா? அவர் தன்னிடமிருந்து அசாதாரண நம்பிக்கையைப் பரவ விடுகிறாரா? மகத்தான லட்சியங்கள்தான் மனிதனை உயரே தூக்கிவிடுகிறது என்கிறார்கள் அறிஞர்கள்.

இத்தனைக்கும் காந்தி பேச வெட்கப்படும், மெலிந்த சாதாரண மனிதராகத்தான் தன் வக்கீல் தொழிலைத் துவங்கினார். நேருவை, இளைஞராக அலகாபாத்தில் பார்த்துப் பழக்கப்பட்ட ஒரு முஸ்லிம் ஜட்ஜ் கூறினாராம், "நேரு அடங்காப் பிள்ளை, செல்லம் கொடுத்துக் கெட்டுப் போன பிள்ளை," என்று.

பெரியாரும், அண்ணாவும் வாழ்க்கையில் அப்படி சாதாரணமாகத்தான் புறப்பட்டிருக்க வேண்டும்.

ஆனால் காலப்போக்கும், சூழ்நிலையும் எத்தனை மாற்றங்களைத் தோற்றுவிக்கின்றன!

மனிதன் தலைவனாவதை வரப்பிரசாதம், அருள் என்று எளிதில் ஒரு வரியில் கூறிவிடலாம். நேருவைப் பற்றி எழுதும் ஆஸ்திரேலிய நாட்டுத் தூதுவர் கூறுகிறார்: "நேரு தன்னைத்தானே நெறிப்படுத்திக் கொண்டார். தேகப் பயிற்சி, உணவு, படிப்பு, பழகும் விதம் என்று எல்லாவற்றிலும் அவர் தன்னை வளர்த்துக் கொண்டார். அது கடைசிவரை அவருடன் இருந்தது" என்கிறார்.

மனித வாழ்க்கையில் எத்தனையோ சம்பவங்கள் நிகழ்கின்றன. ஒவ்வொரு சம்பவத்தின் போதும், அச்சம்பவத்தை நாம் எப்படிச் சமாளிக்கிறோம் என்பதைப் பொறுத்து நமது குணங்கள் உருவாகின்றன. அப்படி ஏற்பட்ட ஒவ்வொரு சம்பவத்தையும் சோதனைகளாக ஏற்றுக்கொண்டு, உண்மைக்கேற்பட்ட போராட்டமாகக் கருதி அதன் மூலம் வளர்ந்தார் மோகன்தாஸ் காந்தி.

லெனினைப் பற்றி எழுதும் வால்டர்டுரான்டி கூறுகிறார், "லெனின் தன் தொண்டர்களிடம் பேசுவதை நான் கேட்டிருக்கிறேன். கனமும் அடர்த்தியும் கொண்ட ஒரு சிறிய மனிதர் அவர். கண்களைக் குருடாக்கும் விளக்கொளியில், இடியெனக் கைதட்டி வரவேற் கிறார்கள். நான் மக்கள் பக்கம் திரும்பி அவர்கள் முகத்தை நோக்கினேன். அவர்கள் முகம் பளிச்சிட்டுக்

கொண்டிருந்தது ஏதோ கடவுளைக் கண்டவர்கள் முகம் போல.

"ஐயாயிரம் முகங்களிலும் அவரைப் பார்த்த மாத்திரத்தில் ஒளி தோன்றிப் பிரகாசிக்கிறதென்றால் நான் சொல்வேன், அவன் சாதாரண மனிதனல்ல" என்று!

லட்சியம் என்ற உயர் விதைகளை, சூழ்நிலை என்ற மண்ணில் விதைத்து, தைரியம் தன்னம்பிக்கை என்ற உரமும் தண்ணீரும் விட்டு வளர்த்த கதையை நாம் மறந்துவிடுகிறோம். நம் கண்களுக்குத் தலைவன் அதிசயப் பிறவியாகத் தோன்றுகிறான்.



# சரித்திர புருஷர்கள்

## 4

புகழ்பெறும் சரித்திர வாய்ப்பு தலைவர்கள் எல்லோருக்கும் கிடைப்பதில்லை. ஒரு நாட்டின் நெருக்கடி மிகுந்த நேரங்களில்தான் சரித்திரத்தை மாற்றி அமைக்கும் சர்வ வல்லமை படைத்த மனிதன் தோன்றுகிறான்; தன் மக்களைத் திசை திருப்புகிறான். அவனது செல்வாக்கு கேள்விகள் இல்லாமல் ஏற்றுக் கொள்ளப்படுகின்றது. தொண்டர்கள் பயத்தினாலோ, நாளைக்கு காசு பணம் கிடைக்கும் என்ற ஆசையாலோ அவனைப் பின்பற்றுவதில்லை. தூய அன்பினால், ஆழ்ந்த ஈடுபாட்டால், கொள்கைப் பற்று காரணமாக விளைந்த தணியாத ஆர்வத்தால், மக்கள் தலைவனைப் பின்பற்றுகிறார்கள். பெரிய மதத் தலைவர்களுக்கு இத்தகையதொரு கூட்டம் உருவாவதைக் காணலாம்.

தலைவனைப் பின்பற்றுபவர்கள் அவனை நம்புகிறார்கள். அவனுடன் அவர்கள் கொள்கைகளை விவாதிப்பதில்லை. ஆனால், அவனோ அவர்கள் வைத்த நம்பிக்கைக்குப் பாத்திரமாக நடந்துகொள்ள வேண்டும்; தன் திறமையை அடிக்கடி வெளிக்காட்டி நிரூபிக்க வேண்டியவனாகிறான்.

இத்தகைய தலைவர்கள் மகத்தான சமுதாய மாற்றங்களின்போது தோன்றுகிறார்கள்; மாற்றத்திற்குக் காரணமாய் இருக்கிறார்கள். கியூபாவில் நிகழ்ந்த அத்தகைய புரட்சி ஒரு காஸ்ட்ரோவை உருவாக்கியது. வியட்நாம் போராட்டம் ஒரு ஹோசிமின்னை வெளியே கொண்டு வந்தது. உப்புசப்பில்லாது போய்க் கொண்டிருந்த பிரெஞ்சு ஆட்சியில் ஒரு டிகாலைக் கொண்டு வந்தது. இந்தியாவின் விடுதலைப் போராட்டம் ஒரு காந்தியையும் நேருவையும் உலகிற்கு அறிமுகப்படுத்தியது. சூழ்நிலை அவர்களை உரு வாக்கியதா அல்லது சூழ்நிலையைத் தங்களுக்கு சாதக மாக அவர்கள் பயன்படுத்திக் கொண்டார்களா என்று நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

எகிப்தின் முடிசூடா மன்னராக விளங்கிய நாசர், பதவிக்கு வருமுன் செல்வாக்கு மிக்க படைத் தலைவராய் இருந்தார். எனினும் அவரது ‘மக்கள் செல்வாக்கு’ வெளிவர வாய்ப்புகளே இல்லாமல் இருந்தது. வாய்ப்பு ஏற்பட்டதும் இலைமறை காய் மறைவாகயிருந்த அவர் செல்வாக்கு நாட்டுக்கே ஓர் உருவத்தை, கௌரவத்தைத் தேடித் தந்தது. அவர் உருவமே நாட்டின் உருவமாய் மாறியது.

பல தலைவர்கள் பதவிக்கு வந்ததும் பதவி மூலம் தன் புகழை நிலைநாட்டிக் கொள்கிறார்கள். மார்ஷல் ஸ்டாலினும், கானா நாட்டின் என்க்ரூமாவும், குருஷேவும் கருணாநிதியும் அப்படி பதவிக்கு வந்து தங்கள் செல்வாக்கை நிலை நிறுத்தியவர்கள்தான்.

ஒரு நாடு இருக்கும் சூழ்நிலையும், காலமும் தலைவனை உருவாக்குகின்றன. 1940-ல் இங்கிலாந்தி னுடைய சுதந்திரமும், பாதுகாப்பும் சோதனைக்

குள்ளாயின. எந்த நேரமும் ஜெர்மன் நாடு படையெடுத்து இங்கிலாந்தைப் பிடித்துவிடும் என்ற பீதி எங்கும் நிலவியது. அந்த நெருக்கடிக் குரலின் பதிலாக வின்ஸ்டன் சர்ச்சில் தோன்றினார். 1933-ல் அமெரிக்காவில் பெரிய பொருளாதார மந்தம் ஏற்பட்டு மக்கள் உணவு வாங்கக் காசில்லாமல் அல்லல் பட்டார்கள். அப்போது அங்கே பணக்கார வீட்டுப் பிள்ளையாக வளர்ந்த பிராங்ளின் ரூஸ்வெல்ட் தோன்றினார். "பயப்படாதீர்கள். பயத்தைக் கண்டுதான் நாம் பயப்பட வேண்டும். ஆகவே, பயத்தை விட்டொழியுங்கள். இந்தப் பொருளாதாரச் சீர்கேட்டை நாம் சமாளிக்க முடியும்" என்று நம்பிக்கை ஊட்டினார்.

ரஷ்யாவில் நிகழ்ந்த வர்க்கப் போராட்டத்தை நடத்திய லெனின் பற்றி அவரது நண்பர் கூறுகிறார்:

"தனது திட்டங்களால் பிறரை உத்வேகமடையச் செய்வார் லெனின். தன் எண்ணங்களை பிறர்மீது செலுத்தி அவர்களை வெல்லும் சாமர்த்தியம் வேறு யாருக்கும் வராது. லெனினுக்கு, தான் ஒரு மகத்தான காரியத்திற்காகப் பிறந்திருக்கிறோம் என்ற கடமை உணர்வு சதா இருந்தது."

டிராட்ஸ்கி கூறுகிறார் லெனின் பற்றி, "லெனின் இல்லாவிட்டால் அக்டோபர் புரட்சியே நடந்திருக்காது" என்று. சமதர்ம உடைமை என்ற சித்தாந்தத்திற்கு ஒரு வடிவம் கொடுத்து அதை நடைமுறைச் சாதனமாக மாற்றிய பெருமை லெனினைச் சேரும். வர்க்கபேதம், பொருளாதார ஏற்றத்தாழ்வு நிறைந்த ஒரு சூழ்நிலையில் லெனின் தோன்றினார்.

சரித்திரப் புகழ்பெறும் சூழ்நிலை மட்டுமல்ல அவர்களுக்கு இருந்தது. 'இத்தகையதொரு இயக்கத்தை

நடத்தப் பிறந்தவர்கள் தாங்கள்' என்றதொரு தொண்டு—உணர்வு அவர்களுக்கிருந்தது. அவர்களது கொள்கையிலுள்ள உண்மை பற்றியும், நியாயம் பற்றியும் அவர்களுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. அவர்களிடம் அசாதாரண தன்னம்பிக்கை இருந்தது. தயக்கமும் சந்தேகமும் இருந்ததாக ஒருநாளும் பேச்சிலோ செயலிலோ அவர்கள் காட்டிக் கொள்ள வில்லை. அவர்களுக்கு எல்லோரையும் நடத்திச் செல்லும் திறமை இருந்தது.

ஹிட்லர் அப்படித்தான் கேட்போர் மனத்தில் மறக்க முடியாத நினைவுகளை எழுப்பினார். அவரது அசாதாரண தன்னம்பிக்கை சொல்லில் தெறித்தது. அவர் ஒருநாளும் விஷயங்களை விவாதிப்பதில்லை. எல்லாவற்றையும் முடிந்த முடிவாக, தன் கொள்கை களை ஒரு வெறியோடு கூறுவார் அவர்.

இத்தாலிய மக்கள் முசோலினியின் மீது கொண் டிருந்த மோகம் அளவற்றது. முசோலினியின் வர லாற்றை எழுதிய லாராபெர்மி, 'முடியாதது என்று ஒன்றுமில்லை' என்று அவர் தனக்குத்தானே கூறிக்கொண்டதாகக் குறிப்பிடுகிறார்.

1922-ல் இத்தாலி இருந்த நிலையைக் கிட்டத்தட்ட இன்று இந்தியா இருக்கும் நிலைக்கு ஒப்பிடலாம். மக்கள் தன்னம்பிக்கை இழந்து இருந்தார்கள். வறுமையால் வாடினார்கள். குறிக்கோளும் மனஉறுதியும் அற்று இருந்தார்கள். லாராபெர்மி எழுதுகிறார்:

"1922-ல் இத்தாலிய சமுதாயம் எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கையை இழந்துவிட்டது; மனஉறுதியை இழந்துவிட்டது; பார்வையை இழந்துவிட்டது. நாம்

இயலாத மனிதர்கள் என்ற தாழ்வு மனப்பான்மையால் வாடியது.

"தானே கற்பனை செய்துகொண்ட பல நோய்களால் நாடு சங்கடப்பட்டது. மக்களைக் காப்பாற்றி அவர்களுக்கு நல்வாழ்வளிக்கும் ஓர் அவதார புருஷனை இத்தாலி எதிர்நோக்கிக் கொண்டிருந்தது.

"முசோலினி வந்தார், காப்பாற்றும் கடவுளாக, அதி மனிதனாக. நீதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவ தாக வாக்களித்தார்.

"இத்தாலி வறுமையிலிருந்து குணம் அடைந்தது. இழந்த கௌரவத்தை மீண்டும் பெற்றது. உலக அரங்கில் சம அந்தஸ்து பெற்று கௌரவம் மிக்க நாடாகப் பவனி வந்தது."

அதைப் படிக்கும்போது இந்தியா வறுமையிலிருந்து விடுபட்ட கதையை யாராவது இப்படி எழுத மாட்டார்களா என்ற ஆர்வம் எழுகிறது. ஒரு நாட்டின் நோய் நொடிகளை ஒரு தலைவன் குணப்படுத்த முடியும். மருந்து என்ன என்று கேட்கிறீர்களா? தன்னம்பிக்கைதான் மாத்திரை. நம்பிக்கையூட்டும் நல்ல வைத்தியர் மட்டும் இருந்துவிட்டால் நம்பிக்கையைப் பரவவிட முடியும். அந்த நம்பிக்கை எனும் கயிற்றின் மூலம் நாட்டைக் கரை சேர்க்க முடியும். நம்மிடம் அத்தகைய நம்பிக்கையூட்டும் தலைவர்கள் இருக் கிறார்கள்.



# தலைவன் கடந்த பாதை

## 5

ஒரு நாட்டின் சரித்திரம் வெறும் சம்பவத் தொகுப்பல்ல. கால வரிசைப்படி தொகுக்கப்பட்ட கணக்குப் பட்டியல் அல்ல. சரித்திரம், மக்கள் மனஎழுச்சிகளின் பிரதிபலிப்பு; மக்களது லட்சியங்களின் வெளி உருவம்; அந்த ஆசைகளை கொள்கைகளாக நெறிப்படுத்திய தலைவனது தீர்க்க தரிசனத்தின் பிரதிபலிப்பு. துணிவின், திறமையின், கற்பனையின், நேர்மையின் பிரதிபலிப்பு.

"அரசியல் சமுதாய அமைப்புகள் நல்ல தலைவர்களைக் கெடுத்துவிடுகின்றன" என்று ரூசோ கூறுகிறார். தலைவர்கள் நேர்மையாளர்களாய் இருந்தால் அடிப்படையில் உண்மையானவர்களாக, யோக்கியமானவர்களாக, கண்ணியம் மிக்கவர்களாக இருந்தால், அரசியல் அவர்களை ஒருநாளும் கெடுக்க முடியாது. பட்டை தீட்டப்பட்ட வைரம்போல் நாடு பூராவும் நேர்மை ஒளிவிடும். மாறாக, அடிப்படையில் நேர்மையைப் புறக்கணிப்பவர்களாக இருக்கும்போது—

பதவி புகழ் அதிகாரத்தால் அவர்கள் சபல சித்தம் உடையவர்களாக மாறும்போதுதான்—அரசியல் அவர்களைக் கெடுக்கிறது.

ஆகவேதான் தலைவனை நாம் தேர்ந்தெடுக்கும் போது, அவன் நல்லவனா, நேர்மையுள்ளம் படைத் தவனா, தனிமனித உயிரையும் உடைமையையும் அக்கறையுடன் காப்பவனா, அல்லது சந்தர்ப்பவாதியா, பதவியால் இழுத்துச் செல்லப்படுபவனா என்பதை நாம் கவனிக்க வேண்டும். அங்கேதான் அந்தத் தலைவன் எங்கு பிறந்தான், எந்தச் சூழ்நிலையில் வளர்ந்தான், அவன் குணநலன்கள் யாவை, நண்பர்கள் யார், அவன் போற்றும் மனிதர்கள், பண்புகள், லட்சிங்கள் யாவை என்பன போன்றவை முக்கியத்துவம் பெறுகின்றன.

மனோதத்துவ நிபுணர் பிராய்டின் வரலாற்றை எழுதிய எர்னெஸ்ட் ஜோன்ஸ் கூறுகிறார், "சிக்கல்கள் வரும்போது ஒரு மனிதன் எப்படி நடந்து கொள்கிறான் என்பது அவன் குணங்களுக்கு எடுத்துக்காட்டு; அவன் வளர்க்கப்பட்ட விதத்தை—வளர்ந்த விதத்தை அது தெரிவிக்கிறது" என்று.

நாகரிகமற்ற மிலேச்சர்களைப் போல் தர்க்கவாதத் திற்கு அப்பால், கட்டுப்படாமல் பிடிவாதம் பிடிப்பது அவரவர்களது குணநலன்களையே பிரதிபலிக்கிறது. இவர்களே ஹிட்லராகவும் முசோலினியாகவும் உருவெடுக்கிறார்கள்.

லெனின் சிறுவனாயிருந்தபோது அவர்கள் வீட்டில் அழகுமிக்க படங்களோ, மற்ற கலைப்பொருட்களோ ஏதுமில்லை. லெனினது சகோதரி மரியாதன் இளவயது அனுபவங்களைக் குறிப்பிடும்போது "கலை ரசனையோ

அனுபவமோ இல்லாமல் நாங்கள் வளர்ந்தோம். பிற்காலத்தில் அது எங்களைப் பாதித்தது" என்கிறார். லெனின் பின்னால் மார்க்சீயத் தலைவரானதும் கலைப் பொருட்களையும் ஓவியங்களையும் 'வெறும் பணக்கார வீட்டு ஆடம்பரங்கள்' என்று சாடினார். கலாரசனை எதிர்ப்பே லெனினிசத்தின் ஒரு பகுதியாக அமைந்தது. எப்படி ஒரு சம்பவம்—இளவயதில் ஏற்பட்ட அனுபவம்—மனிதனது பார்வையையே மாற்றிவிடுகிறது என்பதைக் கவனியுங்கள். அவனது மாறிய பார்வையினால் இருளும் ஒரு பெருமையாக இடம்பெறுவதை—நாட்டின் தலைவிதியாக மாறுவதைக் கவனியுங்கள்.

அதே போலத்தான் மகாத்மா காந்தியின் சொந்த விருப்பு வெறுப்புகள் எல்லாம் காந்தியமாக மாறின. காந்தி யார்மீதும் தன் கொள்கைகளைத் திணிக்காவிட்டாலும் காந்திக்கிருந்த செல்வாக்கினால் அவரது சொந்த விருப்பு வெறுப்புகள் அவர் வாழ்விலும் நாட்டு மக்களிடத்தும் பெரிய இடத்தைப் பிடித்தன. காந்தி பாலையும், உப்பையும் காம உணர்வைத் தூண்டும் பொருள்களாகக் கருதினார். "உப்பை ஆண்மையுடன் சம்பந்தப்பட்ட பொருளாகக் கருதினார். ஆகவேதான் பிரிட்டிஷாரை எதிர்த்து—உப்பு வரியை எதிர்த்து—கடலிலிருந்து உப்பை எடுப்பது இந்தியாவின் ஆண்மையை நிலைநிறுத்தும் ஓர் அடையாளமாக அவர் கருதினார்" என்று மேனாட்டு சரித்திராசிரியர்கள் எழுதுகிறார்கள்.

காந்தி இங்கிலாந்து சென்றபோது, பிரிட்டிஷ் பிரதமர் அவருக்கு ஒரு 'காக்டெயில்' விருந்து அளித்தார். மகாத்மா காந்தி மது அருந்தமாட்டாராதலால்

பிரிட்டிஷ் பிரதமர் தேனீர் கொண்டுவரச் சொன்னார். காந்தி கூறினார், "நான் தேனீர் குடிப்பதில்லை. வெறும் வெந்நீர் கொண்டு வாருங்கள்" என்று. வெந்நீர் வந்ததும் தான் போர்த்தியிருந்த துணியை நீக்கி மடியிலிருந்து ஒரு சிறு பொட்டலத்தை எடுத்து அந்த வெந்நீரில் போட்டார்; "இது பிரிட்டிஷ் அரசாங்கத்தை எதிர்த்துத் தயாரித்த உப்பு. இப்போது நாம் டீ பார்ட்டியைத் தொடரலாம்! இது பிரிட்டிஷாரை எதிர்த்து அமெரிக்கா நடத்திய 'பாஸ்டன்' டீ பார்ட்டி!" என்று கூறி ஒரு நமட்டுச் சிரிப்பைச் சிரித்தார் காந்தி.

மகாத்மா காந்திக்கிருந்த துணிவும் அஞ்சாமையும் அவரது தாயிடமிருந்து அவர் பெற்ற பாடங்கள். சூரியன் வந்தால்தான் சாப்பிடுவது என்று சில நாள் விரதம் அனுசரிப்பார் காந்தியின் தாய். மோகன்தாஸ் சூரியன் வருவதைப் பார்த்துத் தெரிவிக்கத் தெருவி லேயே நின்றுகொண்டிருப்பார். சிலநாள் அந்தச் சூரியன் மேகத்திடையிருந்து வராமலே போய்விடும்; அவர் தாய் 'கடவுள் சித்தம்' என்று கூறி சாப்பிடாமலே நாளைக் கழிப்பார். மகாத்மா காந்தியின் நெறியும், உண்ணாவிரதமும், மன உறுதியும் இப்படிப்பட்ட இள வயது சம்பவங்களிலிருந்தே உருவாகின.

பதினெட்டாம் நூற்றாண்டில், பிரெஞ்சு அரசாங்கம் தன் நாட்டுத் தூதுவர்கள் பிறநாட்டு மன்னர்களையும் மற்ற தூதுவர்களையும் பிரதமர்களையும் கண்டு அவர்களது குணநலன்களைப் பற்றிய மதிப்பீடு தயாரிக்க வேண்டுமென்றும், பின்னால் அதை முன்பிருந்த தூதுவரின் மதிப்பீட்டுடன் ஒத்திட்டுப் பார்க்க வேண்டுமென்றும் உத்தரவு போட்டிருந்தது.

ஜான் கென்னடி அமெரிக்க ஜனாதிபதியானதும் கியூபா நாட்டின் அரசியல் தலைமையை மாற்ற ஒரு கொரில்லாப் படையை அனுப்பினார். எதிர்பாராத விதமாக அவர் அனுப்பிய அமெரிக்கப்படை வசமாக, மொத்தமாக காஸ்ட்ரோவின் கைக்குள் சிக்கி, கென்னடிக்கு ஏமாற்றத்தையும் தோல்வியையும் தந்தது.

கியூபா படையெடுப்பு தோல்வி அடைந்ததைப் பற்றி சரித்திராசிரியர்கள் எழுதுகிறார்கள்: "கென்னடி தன் செல்வாக்கில் பெரு நம்பிக்கை கொண்டிருந்தார். தான் தொட்டது அனைத்தும் ஒரு பூரணத்துவத்துடன் நிகழும் என்ற 'அதிர்ஷ்ட ஜாதக' எண்ணம் அவரிடம் உருவாக்கப்பட்டிருந்தது. கென்னடி பெரிய எழுத்தாளர். தீரமிக்க தலைவர்கள் என்று சரித்திரத்தால் நிரூபிக்கப் பட்டவர்களது சோதனை நிறைந்த வரலாற்றினை அவர் புத்தகமாக எழுதினார். ஆகவே சரித்திரம் நாளை தன்னுடைய முடிவையும் அப்படியே பாராட்டும் என்று நம்பினார். அவர் சாகசம் நிறைந்த ஜேம்ஸ்பாண்ட் கதைகளைப் படிப்பவர். ஆகவே அத்தகையதோர் கற்பனையுள்ளம் அவரது செயலிலும் பிரவேசித்தது."

தலைவனது எண்ணங்களும் கற்பனையும், அவன் வளர்ந்த விதமும், அவன் எடுத்த முடிவையும் அவன் நடந்துகொள்ளும் போக்கையும் தீர்மானிக்கின்றன. நேரு செல்வந்தர் வீட்டுப் பிள்ளை; படித்தவர்; வெளிநாடு சென்றவர். இதெல்லாம் பண்புகளாக அவர் ஆட்சியில் வெளிப்பட்டன. ராஜாஜி வாதிடும் வழக்கறிஞர். தன் லட்சியங்களுக்கேற்ப வாதத்தை திருப்பும், மடக்கும் நுண்ணறிவு பெற்றவர். அரசியல் வாழ்க்கையில் அவர் ஏற்படுத்திய, விட்டுச் சென்ற மரபுகளை எண்ணிப் பாருங்கள்.

படிப்பும், பண்பும், பழக்க வழக்கங்களும், குடிப்பிறப்பும் எப்படி தலைவனின் எண்ணங்களாக, பேச்சாக, செயலாக வெளிப்படுகின்றன என்பதைக் கவனியுங்கள். நிக்சன் உலகின் பெரிய பதவியைப் பிடித்தார். எனினும் அவரது குணங்கள் அவரைக் காட்டிக் கொடுத்துவிட்டன. நிக்சன் ஒரு சந்தேகம் பிடித்த மனிதர். எதிர்க்கட்சிக்காரர்களைப் பற்றி அவருக்கேற்பட்ட பயமும் சந்தேகமுமே அவரை எதிர்க்கட்சியின் திட்டங்களை அறிய உளவாளிகளை அனுப்பச் செய்தது. அதனால் பிடிபட்டார் அவர்.




## 6

"என் மனசாட்சிப்படி நடக்கிறேன்" என்று பெருமையுடன் கூறினான் ஒரு நாட்டுத் தலைவன். "அவன் மனசாட்சி இதுவரை நேர்மையுடன் நடந்து கொண்டிருக்கிறதா, சுயநலத்தின் உருவாக இயங்கி யிருக்கிறதா என்பதைக் கவனிக்க வேண்டும்" என்றார் பதிலாக, ஒரு சரித்திரப் பேராசிரியர்.

ஏனெனில் வாழ்க்கையின் தத்துவம், அரசியலுக்கு வருமுன் பெரிதும் நிர்ணயிக்கப்படுகிறது. தன் சொந்த இயல்புகளுக்கும் குணநலன்களுக்கும் ஏற்ப ஒரு தலைவன் விஷயங்களைச் சிந்திக்கிறான்; சீர்தூக்கிப் பார்க்கிறான். சில விஷயங்களை அலசி ஆராய்ந்து முடிவெடுக்கப் போதுமான பயிற்சியோ முன் அனுபவமோ சில சமயம், தலைவனுக்கு இருப்பதில்லை. அதனால் ஏற்படும் விளைவுகளை நாடு ஏற்றுக் கொண்டாக வேண்டியிருக்கிறது; அனுபவிக்க வேண்டியிருக்கிறது. சிறுபிள்ளை போல பிடிவாதம் பிடித்தாலோ, கிராமத்து நாட்டாண்மை போல வீறாப்பு பேசினாலோ, பல உண்மைகளைப் பார்க்க

மறுத்தாலோ, அதன் பலன்களைத் தலைவன் மட்டும் அனுபவிப்பதில்லை; நாடும் அனுபவிக்க வேண்டி யிருக்கிறது.

உதாரணம். ராஜீவ்காந்தி—அனுபவமுதிர்ச்சி இன்மை.

கருணாநிதி —பொருளாதாரம் பற்றியும் உற்பத்தி பற்றியும்அவரது எண்ணங்கள்.

எம். ஜி. ஆர்—சரித்திரம் அறியாமை.

குருஷேவ் ஐக்கிய நாடுகள் சபையில் "அமெரிக்கர் களைக் குழி தோண்டிப் புதைப்போம்" என்று கர்ஜித் தார். பண்பில்லாமல், தன் கால் பூட்சைக் கழற்றி மேஜையில் அடித்தார். நாடே, உலகமே அதிர்ந்தது. படித்த, பண்புகள் கொண்ட எல்லா ரஷயர்களும் அதிர்ந்து போனார்கள்.

குருஷேவ் படிப்பேதுமில்லாத, நாகரிகப் பண் பாடுகள் பெறாத, ஒரு கிராமவாசியாகவே வளர்ந்து விட்டார். எப்படி வளர்ந்தார், அதன் நாகரிகமற்ற விளைவுகள் என்ன என்பதைக் கவனியுங்கள். சில சமயம் கோமாளி போல நடந்துகொண்டார். அவர் அடுத்து என்ன செய்வார் என்பதைக் கவலையுடன் கவனித்துக் கொண்டிருந்தனர் அவர் நண்பர்கள்.

பதவிக்கு வரும்வரை ஸ்டாலினுக்குப் பயந்து அவர் சொன்னபடி கேட்டுக் கொண்டிருந்த அவர், ஸ்டாலின் இறந்ததும், ஸ்டாலின் ஒரு 'சர்வாதிகாரி கொடூர

மானவன், சந்தேகப் பிராணி' என்று கம்யூனிஸ்டுகளின் மத்தியப் பேரவையில் பொரிந்து தள்ளினார்.

லெனின் நல்ல குடும்பத்தில் வளர்ந்தவர். குள்ளமாக தடித்த உருவம். ரோமங்கள் நிறைந்த உடல். செம்பட்டை முடி அவருக்கு. வீட்டிலிருக்கும் எல்லாப் பொருட்களையும் போட்டு உடைப்பாராம் இளவயதில். லெனின் கடிகாரத்தைப் பிரித்து அக்குவேறு ஆணிவேறாகப் போட்டுவிட்டு அது எப்படி வேலை செய்கிறது என்று பார்த்தேன் என்பாராம். ஒரு நோஞ்சான் மாணவருக்காக ஆசிரியருடன் ஒருமுறை லெனின் சண்டை போட்டார். அவரது உடைத்தெறியும் மனோபாவமே பின்னால் தனி உடைமைத் தத்துவத்தை உடைத்தெறிவதாக மாறியது என்று அவரது வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள். அவர் கிராமத்தில் வளர்ந்தபோது ஏழைகளையும், சிறுபான்மை கொண்ட இனத்தினரையும் தனி அன்போடு கவனிப்பார். இக்குணங்களே பின்னால் அவரை ஏழைகளுக்கு, பாட்டாளிகளுக்குப் பாடுபடும் மகத்தான தலைவராக மாற்றியது.

காந்தியின் இள உள்ளத்தில் 'அரிச்சந்திரா' நாடகம் எத்தகைய லட்சியங்களை—உண்மையே பேச வேண்டும்—என்று உருவாக்கியதோ அதேபோல மா சே துங், லெனினது வரலாற்றைப் படித்து தன் உள்ளத்தைப் பறிகொடுத்தார். உத்வேகம் பெற்றார். இளவயதிலிருந்தே எதிர்ப்பு என்றும், போராட்டம் என்றும், பலாத்காரத்தை உபயோகித்துக் காரியங்களைச் சாதிப்பது என்றும் வளர்ந்தார். சுமார் இருபதாண்டு களுக்குமேல் இவ்வெண்ணங்களில் ஊறிய அவர் கூறினார்: "அரசியல் சக்தியும் அதிகாரமும், துப்பாக்கி

முனையில்தான் உருவாகின்றன” என்று. எப்படி அஹிம்சையைப் பற்றி மா சே துங் கூறியிருக்க முடியும்? வளர்ந்த விதமே வேறு; தன் கொள்கைகளைப் பாதுகாக்க அவர் கையாண்ட வழிகளே வேறு.

ஹிட்லர் பெரிய பெரிய கட்டடங்களிலும், மிகச் சிறந்த கட்டட அமைப்புக்களிலும் உரத்த இசையிலும் ஈடுபாடு கொண்டவர். இந்த இரண்டும் சேர்ந்து ஒரு பெரிய சாம்ராஜ்ய ஆசையை, ராஜதர்பார் நினைவை அவருள் ஏற்படுத்தியது என்கிறார்கள். அவர் அடிக்கடி இவ்வுலக நடைமுறை வாழ்விலிருந்து விடுபட்டுக் காதல் நினைவுகள் சூழந்த கற்பனை உலகில் மூழ்கி இருந்ததாக எழுதுகிறார்கள். ஒரு கற்பனை உள்ளம் எப்படி தன் கற்பனையே நிஜம் என்று நம்பி காரியங்களைச் சாதிக்க முனைந்தது என்பதற்கு அவர் வாழ்வும் சரிவுமே சரியான எடுத்துக்காட்டு.

தம்மைச் சூழ்ந்திருப்பவர்களை—பொதுவாக மக்களை நம்புகிறவர்களே நல்ல தலைவர்கள் என்று எழுதுகிறார்கள். நாம் நமது நண்பர்களை நம்பும்போது அவர்களும் அந்த நம்பிக்கைக்குப் பாத்திரமாக நடந்து உயர முனைகின்றனர். நாம் நம்பாதபோது—சந்தேகப் படும்போது, அவர்களும் நம் மீது சந்தேகப்பட ஏதுவாகிறது. அப்போது பொதுவாக இரு தரப்பாரும் கீழ்நிலையில் இறங்குகிறார்கள்.

இத்தகைய சூழ்நிலை ரஷ்ய நாட்டுத் தலைவர்களிடம் அதிகம் நிலவுவதாக அரசியல் பேராசிரியர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். லெனினே விஷம் கொடுத்துக் கொல்லப்பட்டதாக ஓர் எண்ணம்

உலவுகிறது. ஸ்டாலின் இறந்ததும், குருஷேவ் பதவிக்கு வந்தார். பெரியாவைத் தொலைத்தார். புல்கானினை வைத்துக்கொண்டார். பின், புல்கானினையும் தள்ளினார். குருஷேவ் ஊரிலில்லாதபோது பிரெஷ்நெவ் என்ற புதிய தலைவர் அவரை அப்புறப்படுத்தினார்.

நமது மொகல் மன்னர்களில் சிலர், தந்தையை சிறையில் போட்டுவிட்டு மகன் பதவிக்கு வந்த கதை போலத்தான்! எல்லாவற்றுக்கும் அடிப்படை நம்பிக்கையின்மைதான்; அடிப்படை பயம்தான்; தன் பதவிக்கு ஆபத்து வந்துவிடுமோ என்ற சுயநலம்தான். பெருந்தன்மையாக விட்டுக் கொடுக்கும் உள்ளம் கொண்ட தலைவர்களைக் காண்பது அரிதாகியிருக்கிறது இன்று. பதவி அதிகாரம் என்ற மாமிசத் துண்டை ஒரு நாய்க் கூட்டத்தின் முன் போட்டால் எப்படி இருக்குமோ அப்படி அடித்துக் கொள்கிறார்கள் பதவிக்காக.

சில நாய்கள் தான் தின்ற பிறகும், பிறரைத் தின்ன விடாமல் குரைத்துக் கொண்டிருக்கும். சொல்லப் போனால் அரசியலில் சாமியார்களுக்கோ, ஞானிகளுக்கோ வேலையில்லை! அதனால்தான் ஒரு நல்ல அரசைப் பற்றிக் குறிப்பிடும்போது, சாக்ரடீஸ், “ஒரு நாட்டின் தலைமையைத் தத்துவ ஞானிகள் ஏற்க வேண்டும்” என்று கூறினார். மார்கஸ் ஒளரேலியஸ் போன்ற சில ராஜ ரிஷிகள் நாட்டை ஆண்டிருக்கிறார்கள். மகாத்மா காந்தி போன்ற தூய ஆத்மாக்கள் சமுதாய வாழ்வைப் புனிதப்படுத்தி யிருக்கிறார்கள். ராதாகிருஷ்ணன் போன்ற தத்துவ ஞானிகள் சிலர் நாட்டின் தலைமைப் பதவியில் இருந்திருக்கிறார்கள்.

சட்டியிலிருந்தால்தான் அகப்பையில் வரும் என்பது பழமொழி. அப்படிப்பட்ட நல்லவர்கள் நாட்டின் தலைமை ஏற்பது அந்நாட்டு மக்களின் உயர் எண்ணங்களைப் பொறுத்தது; கலாசாரத்தைப் பொறுத்தது. நாட்டுப் பாரம்பரியத்தையும், அதில் குறிப்பிட்ட அந்த காலப் பகுதியையும் பொறுத்தது. அதற்கும் மேலாகத் தலைமையேற்க வரும் மனிதன், இளைஞனாக வளர்ந்த விதத்தையும் அவனது சரித்திர உணர்வையும் பொறுத்தது.

ஒரு காந்தி இந்தியாவில்தான் பிறந்திருக்க முடியும் என்று அதனால் தான் கூறுகிறார்கள். ஓர் அசோகனின் மனமாற்றம் இந்தியாவில்தான் நிகழ்ந்திருக்க முடியும் என்று கூறுகிறார்கள். ஏனெனில் அத்தகைய எண்ண சூழ்நிலை பல காலமாக நாட்டில் உருவாக்கப்பட்டிருந்தது. இது ஓரளவு உண்மை. ஆகவே நாம் நம் பண்பாட்டை, கலாசாரத்தை அறிய முயல்வோம்; அதைக் காக்க முயல்வோம்.

பண்பாடும் கலாசாரமும் ஒவ்வொரு நாட்டிலும் இருக்கின்றன. தீர்க்கதரிசனமுள்ள தலைவன்தான் அந்த அடித்தளத்தை கண்டுபிடிக்கிறான்; உபயோகிக்கிறான்; உயர்கிறான்; உயர்த்துகிறான்.




# 7

"முடியும் என்று எண்ணுபவனின் கலை வண்ணமே அரசியல்" என்றார் ஓர் அரசியல் ஞானி. ("Politics is the art of the possible") அரசியலும், பதவியும்—ஒரு வாய்ப்பு—நாட்டுக்கு நல்லது செய்ய, மக்கள் வாழ்வை வளப்படுத்த, மக்களிடை ஒரு புது நம்பிக்கையை ஊட்ட. மக்களைப் பாதுகாக்க முடியும் என்று எண்ணுபவனின் உள்ளமும் எண்ணங்களும் மேல் நோக்கியிருக்கின்றன; எதிர்காலத்தை நோக்கி இருக்கின்றன. அப்போது அவனது லட்சியங்களும், கனவுகளும் தனிமனித நிலையை மீறி, சுயநலத்திற்கு அப்பால், மக்கள் சமுதாயத்துடன் நாட்டுடன் இணைந்துவிடுகின்றன.

அந்த நிலையை ஒரு தலைவன் எப்போது அடைய முடியும்? லட்சியம் மட்டுமல்ல தேவை. தன்னைப் பற்றிய அசாதாரண தன்னம்பிக்கை அவனிடம் இருக்க வேண்டும். தன்னைப் பற்றிய நம்பிக்கை இல்லாத மனிதராக எம். ஜி. ஆர். இருந்தார். அறிஞர்களைக் கண்டு பயந்தார். எதிரி கருணாநிதியைக் கண்டு

பயந்தார். உடலால், தேகப்பயிற்சியால் ஒரு தலைவன் நல்ல ஆரோக்கிய நிலையில் இருக்க வேண்டும். முக்கியமாக யாராவது தன் பதவியைப் பறித்துக் கொண்டு விடுவார்கள் என்ற பயம் அவனிடம் இருக்கக் கூடாது. அந்தப் பயம் ஆட்டிப் படைக்கும்போது மனிதனது கருத்துக்கள் தனது தலையை (பதவியை)க் காப்பாற்றிக் கொள்வதில் செல்லுமே ஒழிய லட்சியங்களில் செல்லாது. அத்தகைய பயம் வாழ்வு சாவுப் போராட்டமாகத் தலைவனின் மனத்தை நிறைத்துவிடுகிறது. அந்நிலையில் உள்ள தலைவர்கள் சர்வாதிகாரப் போக்கைப் பின்பற்றுகின்றனர்.

கனடா நாட்டுப் பேராசிரியர் எதெரிட்ஜ் என்பார், நாட்டின் விதியை நிர்ணயிப்பதில் பங்கு பெறுவோரைப் பற்றி சமீபத்தில் ஓர் ஆராய்ச்சி செய்தார். அவர்கள் எத்தகைய மனோநிலை கொண்டவர்கள்? நெருக்கடி என்று வந்தவுடன் துப்பாக்கியை உபயோகிப்பவர் களோ, போர் முழக்கமிட்டு நாட்டைப் போரில் இழுத்து விட்டுவிடக் கூடியவர்களா என்பது பற்றி ஆராய்ந்தார். ஒரு நாட்டைப் போரில் இழுத்துவிடும் ஒரு தலைவனது முடிவு, பெரும்பாலும் அவனது குணநலன்களைப் பொறுத்திருக்கிறது என்ற முடிவுக்கு வந்தார்.

“ஒரு நாடு தனிமனித சர்வாதிகாரத்திற்குப் போகிறதா என்பதை அந்நாட்டின் இலக்கியத்திற்கு உணரலாம். சூழ்ந்திருப்போர்களின் உறவுகளிலிருந்து விடுபட்டு தனித்து வாழும் ஒரு மன இயல்பை ஒரு தலைவன் வளர்த்துக் கொள்ளும்போது அவனது அதிகார போதை அதிகமாகிறது” என்று எழுதுகிறார் பேராசிரியர் டேவிட் மேக்லல்லண்ட். மனோதத்துவ வல்லுநர் எரிக்பிராம் கூறுகிறார், “துப்பாக்கியையும்

போரையும் உபயோகிக்கத் தயாராயிருப்பவர்கள்; சாவைக் காதலிப்பவர்கள்" என்று.

பங்களாதேஷ் போர் நிகழ்ந்தபோது பாகிஸ்தான் மிலிட்டரி தலைவர் யாஹ்யாகான் நெருக்கடியை மறக்க குடிபோதையில் இருப்பாராம். தனது எண்ணங்கள் நோக்கங்கள் சிதறுகின்றன என்று தெரிந்ததும் தலைவனின் மனதில் ஏற்படும் வேகம் மகத்தானது. அது வழக்கமாக பலாத்காரத்திலும் சர்வாதிகாரப் போக்கிலும் முடிகிறது என்று கூறுகிறார்கள், மனோதத்துவ நிபுணர்கள்.

ஒரு நாட்டின் தலைவர் (தலைவி) ஜனநாயகப் பண்புகளுக்கு மதிப்புக் கொடுப்பவரா, அல்லது அவர் சர்வாதிகாரப் போக்குக் கொண்டவரா என்பதற்கும் சூழ்நிலை ஒரு பெருங் காரணமாகும்.

இந்திய நாட்டை எடுத்துக் கொண்டோமானால் ஜனநாயகத் தத்துவம் நமக்குப் புதியது. ஜனநாயக மரபுகள் என்ற வேர் விட நாம் அதிக நாள் சுதந்திர நாடாக வாழவில்லை. நமது தலைவர்களையும் அவர் களது குணநலன்களையும் குறை காணுமுன், நமது பரம்பரையை—வாழ்ந்துவந்த சூழ்நிலையை நாம் சற்று சிந்திக்க வேண்டும்.

கிராமங்களில் நாட்டாண்மைக்காரர் வைத்ததே சட்டமாய்க் கொண்ட பரம்பரை நம்முடையது. கிராமத்தில் நாட்டாண்மைக்காரரை எதிர்ப்பது எளிதல்ல. யாரும் பொதுவாகத் துணிவதில்லை. பின், வீட்டுக்கு வந்ததும், வீட்டில் 'தந்தை' என்ற அதிகார நிழலில் வளர்கிறோம். பெரியவர்களை நாம் எதிர்ப்பதில்லை. அது நமது பண்பல்ல. பள்ளிக்குப்

போனதும், பள்ளியில் ஆசிரியர் வெறும் பாடம் சொல்லிக் கொடுப்பவர் மட்டுமல்ல, ஆசானும்கூட. கண்டிப்பு மாத்திரமல்ல; கையில் பிரம்பும் இருக்கிறது அவரிடம். அங்கும் ஒருவகை அதிகாரத்தின் நிழலில் தான் நாம் வளர்கிறோம். வளர்ந்து வேலைக்கு என்று போனதும் மேலதிகாரி என்பவரின் அதிகார நிழலில் வாழ்கிறோம்.

மாறாக மேற்கத்திய வளர்ப்பில், பெற்றோரும் குழந்தையும் சமமாகப் பழகுகிறார்கள். ஆசிரியரும், மேலதிகாரியும் சமமாக மாணவருடனும், பணி புரிவோரிடமும் பழகுகிறார்கள்.

எனவேதான் நமது சமுதாயத்தில் இன்றும் தவறான அதிகாரத்திற்குக்கூட பணிந்து போகும் ஆண்டான்— அடிமை மனோபாவம் ஊறிப் போயிருக்கிறது.

பர்ட்ராண்டுரஸ்ஸல் கூறுகிறார், "அதிகாரத்திற்கு ஆசைப்படும் ஒரு சக்தி உருவாகும்போது, அந்த அதிகாரத்திற்கும் பதவிக்கும் பணிய ஆசைப்படும் மற்றொரு சக்தியும் அங்கே காத்திருக்கிறது" என்று. நமது பரம்பரையும் சூழ்நிலையும் அதிகாரத்திற்கு மதிப்புக் கொடுப்பதாகவே பணிந்து போக விரும்புவதாகவே அமைந்திருக்கிறது என்பதை நாம் உணர வேண்டும். எதிர்த்துப் போராடும் சக்தி அதிகம் போற்றப்பட வில்லை, வளர்க்கப்படவில்லை.

உலகம் வளர்ந்து வரும் வேகத்தில் அதிகாரத்தைக் காட்டி, பதவியைக் காட்டி பணிய வைப்பது முடியாத காரியமாக ஆகிவிட்டது. சர்வ வல்லமை படைத்த அமெரிக்காவால், ஒரு வடவியட்நாமையோ, கம்போடியாவையோ, சவூதி அரேபியாவையோ,

கட்டுப்படுத்த முடியவில்லை; இன்று உலகில் வேறுவிதமான உறவு நிலைநாட்டப்படுகிறது. ஒருவரை ஒருவர் மதிக்கும் உறவு; ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் பெருந்தன்மை போன்றவை இன்று தேவைப்படுகின்றன.

இந்தப் புதிய உறவின் பெயர் ஜனநாயகம் என்பதாகும். பதவி, அதிகாரம் என்பது போய், தன் கொள்கையை மக்கள் கேட்கும் விதத்தில் சொல்லும் திறமை கொண்டவர்களாலேயே புது உலகத் தலைமை உருவாகிறது. எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்று ஆகிவிட்டபோது, சரியில்லாதவர்களை மக்கள் தேர்தலின்போது தூக்கி எறிந்துவிட முடிகிறது. அந்த நேரங்களில் 'அரசியல் ஒரு சூதாட்டம்' என்று அரசியல்வாதி தன் தோல்வியைச் சமாதானப்படுத்திக் கொள்கிறான். 'மக்களின் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு' என்று வெற்றி பெற்ற தலைவர்கள் பாடுகிறார்கள்; கொண் டாடுகிறார்கள்.

அரசியல் பதவி என்பது நாட்டின் பொதுச் சொத்து. ஊரிலுள்ள மக்கள், "ஐயா, உங்களைப் பார்த்தால் யோக்கியன் போலப் படுகிறது. எனது உடைமையை, உயிரைப் பாதுகாருங்கள். பொதுக் காரியங்களுக்கு வரி என்ற பெயரில் பணம் தருகிறேன். அதைச் சரிவர நிர்வகியுங்கள். உங்களை நம்புகிறேன். அந்த நம்பிக்கையைக் காப்பாற்றுங்கள்" என்று கூறித் தலைவனைத் தேர்ந்தெடுக்கிறார்கள்.

ஜனநாயகம் ஒரு தராசு போல, ஒரு பக்கம் தலைவன், மற்றொரு பக்கம் மக்கள். "தலைவனைத் தேர்ந்தெடுத்து விட்டோம், இனி அவன் பொறுப்பு" என்று மக்கள் விட்டு விடுவார்களானால், தலைவன்

தானே நாட்டின் நிரந்தரத் தலைவனாகத் தன்னை ஆக்கிக் கொள்ள முடியும். இந்தோனேஷியாவில் சுகர்ணோவும் கானாவில் என்க்ரூமாவும் இப்படித்தான் சர்வாதிகாரிகளாக மாறினார்கள். அரசியல் விழிப்பில்லாத நாட்டில், தங்கள் வாக்குரிமையின் வலிமையை உணராத மக்கள் வாழும் நாட்டில் தலைவன் தான் தோன்றியாய்ப் போக வாய்ப்பு உண்டு.

மாறாக இருபத்திநாலு மணி நேரமும் எதிர்க் கட்சிகள், மக்களை வேலை செய்ய விடாமல் தடுத்து, ஆளும் அரசிற்கு எதிராக ஊர்வலங்களையும் போராட்டங்களையும் நிகழ்த்துவது நெருப்புடன் விளையாடுவதற்கு ஒப்பாகும். எதிர்க்கட்சிகளை சமாளிப்பதே எம். ஜி. ஆருக்கு முழு வேலையாக இருந்தது.

ஜனநாயகம் என்பது பரஸ்பர நம்பிக்கையில் வளர்வது; பரஸ்பர விழிப்பில் வளர்வது; தலைவன் மக்களை எழுப்பிவிடும் உற்சாகத்திலும், அதன் பிரதிபலிப்பாக மக்கள் எழுச்சி பெற்று உழைப்பதிலும் வளர்வது.

'என் கட்சி' 'என் ஆட்சி' என்று பார்க்காமல் நமது நாடு என்ற நோக்கில் சிந்தனை விரியும்போது ஜனநாயகம் மலர்கிறது.

# சமாதான தூதுவர்கள்

## 8

உலக அரங்கில் அன்று கிஸ்ஸிஞ்சர் ஒரு மாபெரும் தலைவர். 20 ஆண்டுகளாக சிறிய தீவான பார்மோசாவே நிஜ சைனா என்று சொல்லிக் கொண்டிருந்த அமெரிக்க வெளிநாட்டுக் கொள்கையில் மாறுதலைக் கொண்டு வந்தவர். வியட்நாமில் போர் நிறுத்தமும், இஸ்ரேல்—எகிப்து உடன்பாடும் அவரால் ஏற்பட்டன. அவருக்கு சமாதானத்திற்கான நோபல் பரிசு கொடுத்தார்கள்.

கிஸ்ஸிஞ்சர் ஒரு யூதர்; யூத குடும்பத்தில் ஜெர்மனியில் பிறந்தவர். அவர் பதினைந்து வயதடைந்த போது ஜெர்மனியை ஹிட்லர் ஆண்டு வந்தார். ஹிட்லரால் யூதர்களுக்கு ஏற்பட்ட இன்னல்கள் கொஞ்சமல்ல. ஜெர்மன் அரசாங்கம் கிஸ்ஸிஞ்சரை அரசாங்கப் பள்ளியில் படிக்கக்கூடாதென்று தடுக்கவே, அவர் யூதர்களால் நடத்தப்படும் தனிப் பள்ளிக் கூடத்திற்குப் போக நேர்ந்தது. திடீரென்று ஒருநாள் அவரது தந்தையின் ஆசிரியர் பதவி அரசாங்கத்தால் பறிக்கப்பட்டது. குடும்பம் நிராதரவான நிலையில்

நின்றது. பாதுகாப்பைத் தேடி கிஸ்ஸிஞ்சரின் பெற்றோர் அமெரிக்கா சென்றார்கள். பதினைந்து வயது என்பது ஆழமான எண்ணங்கள் உருவாகும்—பதியும் வயது. கிஸ்ஸிஞ்சரின் இளவயது அனுபவங்கள் எப்படி அவரது முடிவெடுக்கும் திறனைப் பாதித்தன என்பது ஒரு சுவையான ஆராய்ச்சி.

ஜெர்மனியை விட்டு வெளியே வரும்போது கிஸ்ஸிஞ்சர் ஓர் இளைஞர். ஹிட்லரின் அக்கிரமங் களைக் கண்டு அவர் உள்ளம் கொதித்தது. ஆனால் அவரால் ஏதும் செய்ய இயலாத நிலை. எதிர்க்கும் ஜெர்மன் மாணவர்களைத் திருப்பி அடிக்கப் போதுமான உடல் வலிவோ தைரியமோ இல்லாத நிலை. அத்தகையோர் என்ன செய்ய முடியும்? சமயம் வரும்வரை காத்திருப்பார்கள். வஞ்சம் தீர்த்துக் கொள்வார்கள். அங்கே பலாத்காரம் உள்ளடக்கப் படுகிறது. சந்தர்ப்பம் வாய்க்கும்போது அத்தகைய மனிதர்கள், பலாத்காரத்தை உபயோகிக்கச் சிறிதும் தயங்குவதில்லை.

சமாதானத்திற்கும் உலக அமைதிக்குமான பரிசை அவர் பெற்றாலும் அவர் உள்ளம் பலாத்காரத்தால் நிறைந்திருந்தது. "இளமைக்கு மருந்து (பெண்களல்ல, வாலிபமல்ல) வலிமைதான், பலாத்காரம்தான்" என்பார் கிஸ்ஸிஞ்சர்.

வட வியட்நாமோடு சமாதானம் பேசிக்கொண் டிருந்தபோது கம்யூனிஸ்டுகள் இவர் விதித்த கட்டுப்பாட்டுக்கு ஒத்து வரவில்லை. அதைக் கண்டு வெகுண்ட கிஸ்ஸிஞ்சர், வியட்நாமின்மீது குண்டு போடுமாறு நிக்சனுக்குச் செய்தி அனுப்பினார்.

பங்களாதேஷ் போரின்போது, இந்திய உபகண்டத்தின் வரைபடத்தையே இந்திராகாந்தி மாற்றி அமைத்தபோது, அமெரிக்கா தன்னுடன் நட்புறவு பூண்ட பாகிஸ்தானுக்கு உதவ முடியவில்லை; இந்தியாவையும் கட்டுப்படுத்த முடியவில்லை. சினங்கொண்ட கிஸ்ஸிஞ்சர், அமெரிக்காவின் பெரிய அணுக்கப்பலை—போர்க்கப்பலை இந்து மகா சமுத்திரத்திறகு அனுப்பி மிரட்டினார்.

இஸ்ரேலை ஆதரிக்கும் அமெரிக்காவிற்கு இனி எண்ணெய் அனுப்பமாட்டோம் என்று அரேபிய நாடுகள் தீர்மானித்தபோது கிஸ்ஸிஞ்சர் கூறினார்: "மேற்கத்திய நாடுகளின் பொருளாதாரம் இதனால் சீர்குலையுமென்றால், பலாத்காரத்தை அரேபியாமீது உபயோகிக்க அமெரிக்கா தயங்காது."

இக்கட்டான நிலை வரும்போது, எதிரி பய முறுத்தும்போது, தனக்கு நேர்ந்த இளவயதின் பயங்கர அனுபவங்களே அவர் கண்முன் ஓடக்கூடும். அந்தப் பயமே ஆட்டிப் படைக்கக்கூடும். ஹிட்லர் இறந்தபின் யூகோஸ்லேவியா, செக்கோஸ்லேவக்கியா, போலந்து போன்ற நாடுகளில் கம்யூனிசம் பரவியபோது இப்படித் தான் மக்கள் அல்லலுற்றார்கள். கிஸ்ஸிஞ்சரின் இள மனத்தில் ஹிட்லரும், கம்யூனிசமும் வேறு வேறாகத் தெரியவில்லை. பலாத்காரத்தின் வேறு உருவாகவே கம்யூனிசம் அமைந்தது. ஆகவே அவர் போட்ட திட்டமெல்லாம், மக்கள் ஏற்றுக்கொள்ளும் வகையில், கம்யூனிசத்தைக் கட்டுப்படுத்துவதிலேயே போய் முடிந்தது. பயம் மனிதனை விரட்டுகிறது. "பயம் பொய்யாகவும் இருக்கலாம்"—என்று அரசியலில் வாளாவிருந்து தோற்றுப் போக நேர்ந்தால் பின்னால்

சரித்திரத்தைத் திருப்ப முடியாது. ஆகவே ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு தலைவனும் விழிப்புடனும், கண்காணிப்புடனும் நடந்துகொள்ள வேண்டும்.

"உங்கள் இளவயது அனுபவங்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?" என்று கிஸ்ஸிஞ்சரைக் கேட்டபோது, "அதுபற்றி எனக்கு நினைவேதும் இல்லை. அது எனது இன்றைய முடிவைப் பாதிப்பதில்லை" என்றார். மனம் எதை விரும்புவதில்லையோ அதை மறந்துவிடுகிறது. ஆனால் அனுபவங்களோ பசுமையாக ஆழ்மனத்தில் பதிந்து கிடக்கின்றன; நம்மை அறியாது வெளிவரு கின்றன; நம்மை ஆள்கின்றன.

கிஸ்ஸிஞ்சர் அப்படி மறுப்பதற்கு மற்றொரு காரணமும் உண்டு. 'தான் ஒரு நிதானமான மனிதர். விருப்பு வெறுப்பில்லாமல், விஞ்ஞான பூர்வமாக எதையும் ஆராய்பவர்' என்ற எண்ணத்தைப் பிறர் மனத்தில் அவர் உருவாக்க விரும்பினார். தனது இளவயதில் ஏற்பட்ட பயங்கரமான அனுபவங்களின் மூலமாகவே எதையும் நோக்குகிறார் என்று யாரும் சொல்வதை அவர் விரும்புவதில்லை.

நோபல் பரிசு பெறாத மோகன்தாஸ் காந்தி என்ற ஒரு மனிதர் கோடானு கோடி மக்களை அன்புப் பாதையில் அழைத்துச் சென்றார். சூரியன் அஸ்த மிக்காத பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையே நாட்டை விட்டு விரட்டினார். அவர் வாழ்விலும் இளவயது அனு பவங்கள் ஏற்பட்டன. அவருக்கு எத்தகைய அனு பவங்கள் ஏற்பட்டன? அவர் அந்த அனுபவங்களுக்கு எத்தகைய வியாக்கியானம் கொடுத்துத் தன் வாழ்க்கைத் தத்துவமாக அதை அமைத்துக் கொண்டார் என்று கவனிக்கலாம்.

காந்தியும் இளவயதில் உடல் வலுவில்லாதவராய்த் தான் வளர்ந்தார். அவரது பயந்தாங்கொள்ளித்தனமே பின்னால் அஹிம்சையாய் வளர்ந்தது என்று சிலர் கூறுகிறார்கள். உண்மை அதுவல்ல. காந்தி எழுதுகிறார் தனது சுய சரித்திரத்தில்: "நான் என் அண்ணனின் தங்கக் காப்பிலிருந்து சிறிது தங்கத்தை வெட்டி எடுத்தேன். கடைசியில் என் குற்றத்தை ஒரு கடிதத்தில் எழுதி என் தந்தையிடம் கொடுத்து எனக்கு தண்டனை கொடுக்க வேண்டுமென்று கேட்டிருந்தேன். நோய்ப் படுக்கையில் இருந்த என் தந்தை, கடிதத்தைப் படித்தார். முத்துத் துளிகள் போல் அவர் கன்னங்களில் கண்ணீர் வழிந்தது. நானும் கதறி அழுதேன். என் தந்தையார் அனுபவித்த வேதனையைக் காண முடிந்தது. அஹிம்சா தருமத்தை அறிவதற்கு இது எனக்கு சரியானதொரு பாடம் ஆயிற்று. அத்தகைய அஹிம்சை எல்லாவற்றிலும் வியாபிக்கப்படும்போது அது தொட்டதை எல்லாம் தன்மயமாக்கி விடுகிறது. அதனுடைய சக்திக்கு ஓர் எல்லையே இல்லை."

அனுபவங்கள்தான் நம் வாழ்வை அமைக்கின்றன. அந்த அனுபவங்களுக்கு நாம் கொடுக்கும் விளக்கம், அதை நாம் பயன்படுத்தும் முறை இவை நமது குணநலங்களின் பிரதிபலிப்பு. வஞ்சினம் கொண்டவன் பலாத்காரத்தை உபயோகிக்கிறான். அன்பு கொண்டவன் அன்பால், தியாகத்தால் எதிரியைத் தன் வயப்படுத்துகிறான். விதையிலிருந்துதான் செடியாக மரம் கிளம்புகிறது. தலைவனின் எண்ணங்களிலிருந்துதான் ஒரு நாட்டின் விதி நிர்ணயிக்கப்படுகிறது.




# 9

அறிஞர்களும் சிந்தனையாளர்களும் நுண்ணிய அறிவு படைத்தவர்கள்; நுண்ணிய உணர்ச்சி படைத்தவர்கள். ஆகவேதான் அநீதி இழைக்கப்படும் போது கொதித்தெழும் மக்கள் கூட்டத்தின் முன் னணியில் அவர்கள் நிற்கிறார்கள். மெக்சிகோ மக்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியை எதிர்த்து வரி கொடுக்க மறுத்துச் சிறைக்குச் சென்றார் அறிஞர் தோரோ. தோரோவின் சிந்தனையும் செயல்களுமே பின்னால் காந்தியின் ஒத்துழையாமை இயக்கத்தின் வித்துக்களாக அமைந்தன. அதேபோல நீக்ரோவுக்கு இழைக்கப்படும் அநீதிகளை எதிர்த்து மார்ட்டின் லூதர் கிங் போராடினார். சமீப காலங்களில் வியட்நாம் போருக்கெதிராக அமெரிக்க பல்கலைக் கழக மாணவர்கள் போராடினர்.

1965-ல் தமிழ்நாட்டில் நிகழ்ந்த மொழிப் போராட் டம் கல்லூரி மாணவர்களாலும், படித்தவர்களாலுமே துவங்கப்பட்டது. சர்வாதிகாரத்திற்கு எதிராக

ரஷ்யாவில் சோல்னீசட்சன், போரிஸ் பாஸ்டர்நாக் போன்றோர் போராட்டம் நடத்தினார்கள்.

“மக்களைத் திருத்த முடியாது” என்று (அறிஞர்கள்) மனம் நொந்துபோகும் போது, அவர்களுக்கு அக்கரை பச்சையாகத் தோன்றுவதுண்டு.

அப்போது வேறு கலாசாரங்கள், கொள்கைகள் எல்லாம் ஒரு லட்சிய உலகாக அவர்களுக்குக் காட்சி தரும். உள்நாட்டில் எந்த சர்வாதிகாரத்தைக் கண்டித்து வெறுத்து ஒதுக்குகிறார்களோ அதே சர்வாதிகாரம் வெளிநாட்டில் நன்மை செய்யும் அற்புத இயக்கமாக அவர்களுக்குப் படும். நமது ஊர் கம்யூனிஸ்ட் சித்தாந்திகள் இந்த வகைப்பட்டவர்கள். நம்நாட்டில் மட்டுமல்ல. 1930-ல், அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் அப்படியொரு ரஷ்ய மோகம் இருந்தது. பின், 1950-ல் பிரான்சிலும் இத்தாலியிலும் ஒரு ரஷ்ய மோகம், சீன மோகம் எழுந்தது. வெளிநாட்டு கம்யூனிஸ்டுகள் உள்நாட்டில் விளைத்த சம்பவங்களைக் கண்கூடாக இந்தோனேஷியாவிலும், செக்கோஸ்லோவாகியாவிலும், போலந்திலும், ஆப்பிரிக்க நாடுகளிலும்—கண்டதும் பல அறிஞர்களுக்குத் தத்துவம் ஏற்படுத்திய தலைமை பற்றித் தயக்கமும் குழப்பமும் ஏற்பட்டது, மோகம் விடுபட்டது.

அண்டைநாடான சீனா தொடுத்த போர், இந்திய கம்யூனிஸ்டுகளிடையே ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தியது.

புதிய உலகத்தை நிர்மாணிக்கும் புரட்சி உத்வேகத்தில் அறிஞர்கள் இழுத்துச் செல்லப்படும்போது அவர்களால் சும்மா இருக்க முடிவதில்லை. ‘நாடு...நாடு’ என்ற எண்ணம் அங்கே தியாகச் சுடர் விடுகிறது.

செயிண்ட் சைமன், ராபர்ட் ஓவன் போன்ற அறிஞர்கள் நாட்டின் மீது கொண்ட அக்கரையின் விளைவாக, ஐரோப்பாவை ஆண்ட மன்னர்களுக்கு வேண்டுகோள் விடுத்த வண்ணம் இருந்தார்கள். ரஷ்ய நாட்டு அறிஞர் ஆகஸ்ட் காம்டே முதலாவது நிக்கலஸ் சக்கரவர்த்திக்கு தான் எழுதிய தத்துவக் கட்டுரைகளை அனுப்பி வைத்தார். அதில் ரஷ்யா முன்னேற பல யோசனை களைத் தெரிவித்திருந்தார்.

அறிஞர்கள் நிகழ்த்திய சமுதாயப் புரட்சிகளில் பிரிட்டிஷ் சமுதாயத்தில் பர்னார்ட்ஷா போன்ற அறிஞர்கள் விளைத்த புரட்சியே அறிஞர்களின் சாதனைக்கு தலைசிறந்த எடுத்துக்காட்டாகும். அது ரத்தம் சிந்தி துப்பாக்கி முனையில் ஏற்பட்ட புரட்சியல்ல. ரத்தம் சிந்தாது விளைந்த புரட்சி. ஓர் ஐம்பது ஆண்டு காலமாக அறிஞர்கள் ஒரு குறிப்பிட்ட நோக்கோடு தங்கள் பேச்சாலும், எழுத்துக்களாலும் பிரிட்டிஷ் சமுதாயத்தின் அடிமட்டத்திலிருந்து ஓர் அறிவுப் புரட்சியை எழுப்பினர். அதன் விளைவுதான் இன்றைய இங்கிலாந்தின் சோஷலிச சமுதாயம்.

தாங்கள் பதவி ஏற்க வேண்டுமென்று, ஆட்சி புரிய வேண்டுமென்று அவர்கள் என்றும் விரும்பவில்லை. ஆகவே சுயநலமில்லாத நிலையில், அவர்கள் லட்சியத்திற்காக-சில கொள்கைகளுக்காக வாழ்ந்தனர். கவர்ச்சி மிகுந்த தலைவர்களையும் அவர்களுக்குக் கூடும் மக்கள் கூட்டத்தையும் காணும்போது, அவனது காந்த சக்தியை எப்படி, நாட்டின் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தலாம் என்று எண்ணினர். தலைவன் நல்ல பாதையில் நடக்க எப்படி வழிகாட்டலாம் என்று சதா சிந்தித்தனர்.

அறிஞர்கள் தனிமனிதர்களாக தங்கள் அறிவுத் திறனை உபயோகித்திருந்தால், ஒரு பெரிய தத்துவ ஞானியாக அவர்கள் வாழ்வு முடிந்திருக்கும். ஆனால் அறிஞர்கள் ஒரு கூட்டமாக—ஃபேபியன் சங்கம் என்ற அமைப்பின் கீழ்—இயங்கத் துவங்கியபோது அசாதாரண வலிமை பெற்றார்கள்.

அடிமேல்அடி அடித்தால் அம்மியும் நகரும் என்பதுதான் அவர்கள் சித்தாந்தம். நல்லதை விடாமல் சொல்லிக்கொண்டே இருந்தால் நாட்டின் திசையைத் திருப்ப முடியும் என்று அவர்கள் நம்பினார்கள்; நிரூபித்தார்கள்.

"சில சோஷலிஸ்டுகளை உருவாக்கினால் போதாதா? சோஷலிசம் பின்னால் தானே வராதா?" என்று எச். ஜி. வெல்ஸ் போன்ற எழுத்தாளர்கள் கூறியபோது ஃபேபியன் சங்கத்தினர், "சோஷலிசத் தலைவர்கள் சிலரை உருவாக்குவது எங்கள் நோக்கமல்ல. சோஷலிச மக்களை உருவாக்குவதுதான் எங்கள் நோக்கம். இயக்கம் மக்களிடமிருந்து புறப்பட வேண்டும். தலைவர்களிடமிருந்தல்ல" என்று கூறினார்கள்.

மண்ணிலே நீரை ஊற்றினால் பூமிக்குள் அது பரவுகிறதே மெதுவாக, அதுபோல மக்களை எங்கள் கொள்கைகளில் ஊற வைக்கிறோம் என்றார் ஷா. பாடுபடும் சமுதாயத்தில் ஒருவராகத் தங்களைக் கருதினார்கள். கொள்கை என்று அளவில் பாட்டாளி யிடமிருந்து தாங்கள் வேறுபட்டவர்கள் என்று கருதினார்களே ஒழிய, கலாசாரத்தால் அறிவால் தாங்கள் உயர்ந்தவர்கள் என்று அவர்கள் தங்களைக் கருதவில்லை.

வாரந்தோறும் அவர்கள் கூடிப் பேசினார்கள். கருத்துக்களை விவாதித்தார்கள். யார் காதில் விழ வேண்டுமோ அவர்களைச் சந்தித்துப் பேசினார்கள். விவாதித்த போதெல்லாம் வரிசையாகப் புள்ளி விவரங்களைக் கூறித் திணற அடித்தார்கள்; தங்கள் கொள்கைக்கு வலுத் தேடினார்கள். எச். ஜி. வெல்ஸ் என்ற அந்தப் புகழ்மிக்க எழுத்தாளர் இவர்களைப் 'புதிய சாணக்கியர்கள்' என்று வர்ணித்தார்.

உலகை ஆட்டுவிக்கும் சூத்திரக் கயிற்றைக் கையில் பிடித்திருக்கும் உணர்வு எழுமாம் அவர்கள் கூட்டத்தில் இருக்கும்போது. சட்டத்தின் நன்மை தீமைகள் அங்கே விவாதிக்கப்படுமாம். அதுபற்றி ஏதாவது உடனடியாகச் செய்தாக வேண்டும் என்ற வேகத்துடன் அரசியல் வாதிகள் அவ்விடத்தை விட்டுப் புறப்படுவார்களாம்.

ஃபேபியன் சங்க அங்கத்தினர்கள் பெரும்பாலும் அரசாங்க அலுவலகத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்தவர்கள்தான். அவர்கள் அலுவலகம் காலை 11 மணிக்குத் துவங்கும். ஆகவே இவர்களது வழக்கமான வேலையுடன் சங்க வேலைகளைச் செய்ய நிறைய நேரம் இருந்தது.

ஃபேபியன் சங்க உறுப்பினர்களுக்கு தாங்கள் 'மகத்தான மாற்றத்தைச் சாதிக்கும் ஓர் அறிஞர் கூட்டம்' என்ற பெருமையும் ஈடுபாடும் இருந்தது.

ஃபேபியன் சங்க உறுப்பினர் சிட்னிவெப் ஓர் இசைக் கச்சேரிக்குப் போயிருந்தார். அது முடிந்ததும் அவரது நண்பர்கள், "எப்படி இருந்தது கச்சேரி?" என்று கேட்டார்கள். "மிக நன்றாக இருந்தது. இடைவேளை யின்போது நமது சுகாதார அமைச்சருடன் பிரசவ

காலத்தில் பெண்கள் செத்துப் போவதைத் தடுக்க வேண்டியதன் அவசியம் பற்றித் தீவிரமாகப் பேசிக் கொண்டிருந்தேன்" என்றார்.

'தலைவனுக்கிருக்கும் பொறுப்பு எனக்கும் இருக்கிறது' என்று அறிஞர்கள் பொது வாழ்வில் ஈடுபட வேண்டும். தன்னைப் பின் வைத்து நாட்டை முன் வைத்து மக்களுக்கும் நாட்டுத் தலைவர்களுக்கும் வழி காட்ட வேண்டும். யோசனை சொல்ல வேண்டும்; ஒதுங்கி நின்று அண்ணாந்து பார்ப்பது அழகாகாது. கண்களை மூடிக் கொள்வதோ கடமை தவறியவன் செயலாகும்.

அறிஞர் பெருமக்களே! படித்தவர்களே!
முன்வாருங்கள்!



# தலைமையும் அறிவாளிகளும்

## 10

'படித்தவர்கள் அறிவாளிகள் தலைமை ஏற்கக் கூடுமா? அவர்களால் சிந்தனையையும் பேச்சையும் செயலாக்க முடியுமா? அன்றாட அரசியலுக்கு அவர்களால் ஈடுகொடுக்க முடியுமா?' என்பன போன்ற கேள்விகள் அடிக்கடி எழுகின்றன. வெகு சில நாடுகளிலேதான் அறிவாளிகள், சிந்தனையாளர்கள், தத்துவஞானிகள், கவிஞர்கள் ஆட்சியில் அமர்கிறார்கள்; அமர்ந்தாலும் வெகு சில நாடுகளில் தான் தொடர்ந்து ஆட்சி செய்கிறார்கள். 'பதவி ஏற்றும் தனித்தன்மையை இழந்துவிடாமல் ஆட்சி செய்தவர்கள் சிலர்தான். மசாரிக், உட்ரோ வில்சன், லியான்புளூம், நேரு, டிஸ்ரேலி, கிளேட்ஸ்டோன்' என்று சிலரே அப்படி இருந்திருக்கிறார்கள் என்று எழுதுகிறார் அமெரிக்க சமூகவியல் பேராசிரியர் கோசர்.

தமிழ் நாட்டில் நமது நிலை வேறுவிதமாக இருக்கிறது. சில படித்தவர்களும், அறிவாளிகளும் "அரசியல் கேவலமாகிவிட்டது. முட்டமான மனிதர்கள் உள்ளே புகுந்துவிட்டார்கள்; அரசியல் மூன்றாந்தர

மனிதர்களின் புகலிடமாகி விட்டது” என்று கூறு கிறார்கள்; ஆத்திரப்படுகிறார்கள். அவர்கள் கூறுவதில் உண்மை இருக்கிறதா இல்லையா என்பதை ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

“மட்டமானவர்களால் அது நிறைக்கப்படுகிற தென்றால் அது ஏன் அப்படி?” என்று படித்தவர்கள் சிந்திக்க வேண்டும்.

படித்தவர்களும், பட்டம் பெற்றவர்களும் ஏதோ தாங்கள் தனிப்பட்டவர்கள் போலவும், தாங்கள் உயரே இருப்பதாகவும் எண்ணுகிறார்கள். அவர்களுடைய போக்கும் செயலும் ‘நாட்டுப் பொதுவாழ்வில் ஈடுபடுத்திக் கொள்வது, கேவலமானது’ என்ற அவர்களது எண்ணத்தைப் பறையடிக்கின்றன.

அரசியல் மூன்றாந்தர மனிதர்களால் நிறைந்திருக் கிறது என்று வைத்துக் கொண்டால் அதற்குப் படித்தவர்கள் காட்டும் போலித்தனமும், அவர்கள் ஈடுபடாததும்தான் காரணம். படித்த பலர் நிரந்தரமான வருமானத்தையும் வசதியான குடும்ப வாழ்க்கையையும் விரும்பிப் பொதுவாழ்வில் இறங்குவதில்லை. பலர் தாங்கள் உயர்ந்தவர்கள் எனவும் தங்களைக் கறைப் படுத்திக் கொள்ளக்கூடாது என்ற எண்ணங்களாலும் வாழ்கின்றனர்.

மர்லின்கிராட் நிறுவனத்தின் தலைவர் பால்தேயர் கூறினார், பட்டம் பெறும் மாணவர்களுக்கு அறிவுரையாக: “நீங்கள் விளையாட்டை வேடிக்கைப் பார்க்கலாம். காலரிகளில் அமர்ந்து அல்லது நீங்கள் மைதானத்தின் நடுவில் நின்று விளையாடும் வீரர்களாக இருக்கலாம். ஆனால், என்றும் விளையாட்டு

வீரர்களாக இருக்கவே ஆசைப்படுங்கள்; வேடிக்கை பார்ப்பவர்களாக அல்ல. அதேபோல்தான் பொது வாழ்க்கையிலும். பொதுப்பணியில் ஈடுபடுங்கள், இதற்கு சிறு தியாகத்தை மேற்கொள்ள வேண்டியதாயிருக்கும்; உங்கள் நேரத்தை செலவழிக்க வேண்டியதாயிருக்கும்; உங்கள் உழைப்பைக் கொடுக்க வேண்டியதாயிருக்கும்; அதை நீங்கள் செய்யத் தயங்கினால் நாடு மேலே நடைபோடுவது நின்றுவிடாது. நீங்கள் நாட்டின் பொதுப்பணியில் இறங்காதபோது, நாட்டின் காரியங்களை வேறு யாராவது செய்ய முன்வருவார்கள். அவர்கள் செயல் உங்கள் கருத்துக்கு ஏற்றதாயிருக்காது. அவர்கள் உங்களைவிடத் திறமையில் குறைந்தவர்கள் உங்களுக்காக முடிவெடுப்பார்கள். அதன் பலனை நீங்கள் அனுபவிக்க வேண்டியிருக்கும். ஆகவே, விளை யாட்டு வீரர்களாய் இருங்கள்" என்றார்.

நமது ஊரில் சில படித்தவர்கள் கண்டனம் கூறுவதிலேயே காலத்தைக் கழிக்கின்றனர். அதைப் பெருமையாகவும் கருதுகின்றனர். கெட்டதை நிறுத்த வேண்டியது நல்லதுதான். ஆனால், மாற்றுக்கு என்ன நல்ல காரியத்தை எப்படிச் செய்ய வேண்டுமென ஒரு யோசனை தெரிவிக்காதபோது, அது கண்டனம் செய்வோரின் ஞானசூன்யத்தையே காட்டுகிறது.

படித்தவர்கள் நமது ஊரில் பயந்துகொண்டிருக் கிறார்களா, பாதுகாப்பைத் தேடி மறைந்துகொண்டிருக் கிறார்களா, 'ஒன்றும் தேறாது, பயன்படாது' என்று நம்பிக்கை இழந்த நிலையில் இருக்கிறார்களா என்பது தெரியவில்லை. ஆனால், ஒன்று மட்டும் நிச்சயம். படித்தவர்கள் தயங்கும்போது யாராவது தேவையை நிரப்ப வருகிறார்கள். பொறுப்பை நிர்வகிக்க வரு

கிறார்கள். படிக்காதவர்கள் தலைமை ஏற்றுவிட்டார் களே என்று பின்னால் படித்தவர்கள் குறைப்படுவதில் பெருமையில்லை.

ஒரு கட்சி மாநாட்டில் இரு மாவட்ட கட்சிச் செயலாளர்கள் பேசிக்கொண்டார்களாம்; “இந்தப் பிள்ளை ஏன் படிச்சுட்டு இந்த அரசியல்லே வந்து உட்கார்ந்துகிட்டிருக்கு? எம். ஏ. படிச்சதற்கு ஒரு நல்ல வேலை வாங்கிக்கிட்டுப் போகாமே?” என்று ஆதங்கப் பட்டார்களாம். அரசியலைப் பற்றி கீழ் மட்டத்திலுள்ள மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதை இது விளக்குகிறது. “அரசியல் கீழ்த்தரத்து மக்களின் வேலை; படித்தவர்களின் வேலை அல்ல” என்று கீழ்த்தர மக்கள் நினைப்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டு.

சர்வதேசப் புகழ்பெற்ற ஒரு தமிழர் ஜி. பார்த்தசாரதி கூறினார். “நம் நாட்டில் எல்லோரது கவனமும் அரசியலிலும், சினிமாவிலும் இருக்கிறது. ஒரு அரசியல் தலைவரது பேச்சிற்குள்ள முக்கியத்துவத்தை ஒரு பேராசிரியரது கருத்திற்கு மக்கள் காட்டும் நிலையை நம் நாட்டில் உருவாக்க வேண்டும்; ஒரு : பத்திரிகைத் தலையங்கத்திற்கு மக்கள் காட்டும் நிலை உருவாக வேண்டும். ஒரு தொழிலதிபர் சொல்லிற்கு மக்கள் காட்டும் நேரம் வர வேண்டும். அப்போதுதான் அது உண்மையான ஜனநாயகமாக, உண்மையான மக்கள் சமுதாயமாக மலர முடியும். இதற்குத் துணிவும் தியாகமும் தேவை” என்றார்.

அப்படி ஒரு நிலையை நாம் உருவாக்கத் தவறி விட்டோம். இதன் காரணமாக விஷயம் தெரியாத அரசியல்வாதிகள், எல்லாம் தெரிந்தவர்களாக,

சமுதாயப் படுதாவையே நிரப்பிவிடும் துர்ப்பாக்கியம் நேர்கிறது.

இப்படிக் கூறுவதன் மூலம் படித்தவர்கள், அறிவாளிகள், திறமைசாலிகள் சிலர் அரசியலில் இருப்பதை நான் மறுக்கவில்லை. நான் குறிப்பிடுவது பொதுநோக்கில்தான்.

1967-ல் தி. மு. கழகம் பதவி ஏற்றபோது, இப்படிப் படித்தவர்கள், அறிஞர்களாலான ஒரு குழு அரசியல் வாதிகளுக்கு ஈடு கொடுக்கும் வண்ணம் உருவாக வேண்டியதன் அவசியத்தைப் பற்றி டாக்டர் மு. வ.வும் காமராஜரும் பேசினார்கள். அது ஏனோ பின்னால் செயல் வடிவம் பெறவில்லை.

அறிஞர்கள், பொதுவாக அரசியலின் நடை முறையை உணராதவர்கள். அங்கு செய்ய வேண்டிய உடன்பாடுகளும் அணைப்புக்களும் அறிஞர்களின் தன்மைக்கு ஏற்றதல்ல. ஆகவேதான் அவர்கள் பதவிக்கு வருவதும் ஆள்வதும் சகஜமான நிகழ்ச்சிகளல்ல. நேரு, அண்ணா போன்றவர்களே இரு வேறு உலகத்தின் 'திரு'வினை அறிந்து செயல்பட்டார்கள்.

பிரெஞ்சு நாட்டுப் புரட்சியும், ரஷ்யாவில் நிகழ்ந்த மார்க்சிசப் புரட்சியும் மகத்தான சிந்தனாவாதி களாலேயே நிகழ்ந்தன. அங்கே சிந்தனாவாதிகளே தலைமை ஏற்றார்கள்.

ஆனால் வழக்கமாக அறிஞர்கள், பதவியிலிருப் போருக்கு அரிய ஆலோசகர்களாக இருந்திருக்கிறார்கள். ஒரு நூற்றாண்டு காலமாக மெதுவாக இங்கிலாந்தில் நிகழ்ந்த சோஷலிச மாற்றத்திற்கு அறிஞர்களே காரண

மாயிருந்திருக்கிறார்கள். சிட்னிவெப், பர்னார்டுஷா, கிரஹாம் வாலஸ், சிட்னி ஆலிவியர் போன்ற அறிஞர்கள், ஃபேபியன் கழகம் என்ற அமைப்பின் கீழ் பிரிட்டிஷ் மக்களது மனோபாவத்தையே மாற்றினார்கள் தங்கள் கருத்துக்களால்.

மற்றொரு முறையிலும் அறிவாளிகள் சமுதாயத்தைத் திருத்தி அமைத்திருக்கிறார்கள். ரூஸ்வெல்ட் அமெரிக்க ஜனாதிபதியாகப் பதவியேற்ற போது படித்த இளைஞர்களை அறிஞர்களைத் தனக்கு ஆலோசனை சொல்ல அழைத்தார். அறிஞர் குழு (Brain Trust) என்ற ஒன்றை ஏற்படுத்தினார். அவர்களது செல்வாக்கு அரசியலில் தனி முத்திரையைப் பதித்தது. அடுத்து அதைப் பார்ப்போம்.



# 11

அறிஞர்கள் நாட்டின் தலைமையில் மற்றொரு விதமான மாற்றத்தைக் கொண்டு வந்தார்கள். இந்தச் சக்தி மிகுந்த சாதனை முதலில் அமெரிக்காவில் பிராங்க்ளின் ரூஸ்வெல்ட்டின் காலத்தில் நிகழ்ந்தது. ரூஸ்வெல்ட் பதவிக்கு வந்ததும், புதிய உறவு (New deal) என்று தன் கொள்கையை வெளியிட்டார். பலவிதங்களில் அவர் செய்தது புதுமையாக இருந்தது.

அவர் செய்த புதுமையை அதிருப்திப் பட்டோரின் வார்த்தையில் வருணிக்க வேண்டுமானால் 'வாஷிங்டனை ஒரு முரட்டுத்தனமான இளைஞர் கூட்டம் ஆட்சி செய்கிறது' என்று கூறியதை நினைவு கொள்ள வேண்டும்.

கொலம்பியா பல்கலைக் கழகத்திலிருந்து பொருளாதார நிபுணர்களையும், கார்னெல் பல்கலைக் கழகத்திலிருந்து விவசாய நிபுணர்களையும், ஹார்வர்டு பல்கலைக் கழகத்திலிருந்து அரசியல், சமுதாய நிபுணர்களையும் அவர் தருவித்தார்.

பெலிக்ஸ் பிராங்பர்ட்டர், ஜெரோம் பிராங்க் என்ற இரு திறமைசாலிகளிலிருந்து அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் அறிஞர் குழு அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டிற்கு யோசனை கூற அமைந்தது. அதில் பலர் பத்திரிகாசிரியர்கள், நிர்வாகிகள், வழக்கறிஞர்கள், பொருளாதார நிபுணர்கள். பலரும் பல துறைகளிலிருந்து வந்தாலும், அவர்களிடம் நாட்டைப் பற்றிய ஒரு முகமான எண்ணம் இருந்தது. எல்லோரும் இளைஞர்கள். இருந்தாலும் அவரவர்கள் துறையில் தங்கள் முத்திரையைப் பதித்தவர்கள். வேகம் நிறைந்தவர்கள். நாடு போய்க்கொண்டிருக்கும் ஆமை வேகத்தைக் கண்டு அதிருப்தி கொண்டவர்கள்.

நாட்டுக்கு என்ன தேவைப்படுகிறது என்பதைப் பற்றி அவர்களுக்குத் தீர்மானமான அபிப்பிராயம் இருந்தது. பெரிய பெரிய திட்டங்களைப் பற்றிக் கனவு கண்டார்கள். எத்தனையோ விதங்களில் அவர்கள் குணங்களால் வேறுபட்டிருந்தாலும் நாட்டின் தேவையையும் அவசரத்தையும் உணர்ந்திருந்தார்கள்.

“சில காரியங்கள் செய்யப்பட வேண்டும், அவை இப்போதே செய்யப்பட வேண்டும்” என்று துடியாக இருந்தார்கள்.

இவர்கள் பல துறைகளில் மேல்—நிர்வாகத்தை மேற்கொண்டார்கள். வாஷிங்டனிலும் நமது ஊர்போல அரசாங்க அதிகாரிகள்தான் மேல் நிலையில் இருந்துகொண்டு ஆட்சி செய்வோருக்கு யோசனை கூறி வந்தார்கள். அரசாங்க அமைப்பில் மாட்டிக்கொண்ட பல அதிகாரிகளும், நாளடைவில் தங்கள் சுய முயற்சியை இழந்து, ஒரு செக்கு மாட்டுத் தன்மையைப்

பெற்றுவிடுகிறார்கள். இதனால் புதிய நோக்கும், வழக்கத்திற்கு மாறுபட்ட கருத்துக்களும் ஆட்சியில் புகுவது அரிதாக இருக்கிறது. இந்தக் கதியில் இருந்த வாஷிங்டனில் பல இளைஞர்கள் நிர்வாகத்தை மேற்கொண்டபோது ஒரு புரட்சியே நடந்தது.

முதன்முறையாக; வயதும் அனுபவமும் பெற்றால் தான்—சீனியாரிட்டி மூலம்தான்—உயர் பதவி பெறலாம் என்று எண்ணிக் கொண்டிருந்த ஒரு நிலையில் ஒரு கலக்கம் ஏற்பட்டது. ‘திறமைக்கு மதிப்பு உண்டு. ஆட்சியாளர்கள் திறமையை, அறிவை மதிக்கிறார்கள்’ என்ற புதிய சூழ்நிலை இதனால் ஏற்பட்டது. இந்த அறிஞர் குழு நாட்டின் மேல் நிர்வாகத்தை மேற்கொண்டதும் எங்கும் ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டது. அரசாங்க ஆட்சியில்கூட ‘எல்லாம் முடியும்!’ என்ற எண்ணம் திடீரென்று எங்கும் பரவியது. புது நம்பிக்கை பிறந்தது.

அறிவும் திறமையும் கொண்ட குழு நாட்டின் ஒவ்வோர் அடிப்படைப் பிரச்சினையையும் அலசி எடுத்து வழி கண்டது. சுரங்கத் தொழிலாளர் பிரச்னையிலிருந்து பசும்பாலின் விலை வரை அவர்கள் எல்லா விஷயங்களையும் தொட்டார்கள். இதன் விளைவாக ஒரு விழிப்பும் துடிப்பும், எதையும் புதிய முறையில் அணுகும் துணிவும், சமயத்திற்கேற்ப காரியங்களைச் சாதிக்கும் திறனும் நிலவியது.

இங்கிலாந்தில் ஃபேபியின் கழகத்தினர் செய்த சாதனையில், காரியங்களைச் செயலாக்குவதில் அவர்கள் நேரடி பங்கு பெறவில்லை. அவர்கள் வெறும் சிந்தனையாளர்களாக நின்றார்கள். அதனால் நாட்டில்

அவர்கள் ஏற்படுத்திய புரட்சி நாள்பட்ட மெதுவான புரட்சியாக ஆயிற்று. ஆனால் வாஷிங்டனில் அமைந்த அறிஞர்—திறமைசாலி குழுவோ தாங்களே தங்கள் கருத்துக்களைச் செயலாக்குவதில் ஈடுபட்டார்கள். அவர்களுக்கு அத்தகைய வாய்ப்பு இருந்தது. ஆகவே எண்ணத்திற்கும் செயலுக்கும் அதிகம் இடைவெளி இல்லை. காரியங்கள் உடனடியாக நிகழ்ந்தன. தங்கள் சாதனைகளைத் தங்கள் கண் முன்னேயே பார்த்து மகிழும் வாய்ப்பும் அவர்களுக்குக் கிடைத்தது. அறிஞர்கள் அதிகாரத்தின் வலிமையை ரசித்தார்கள். அதை நல்ல காரியத்திற்குப் பயன்படுத்தினார்கள். அரசாங்க அதிகாரிகள் போல் அல்லாது அவர்களது பதவிக்காலம் அவர்கள் தலைவனது பதவிக்காலத்தோடு இணைந்திருந்தது. அது குறுகிய காலம் என்று உணர்ந்து அவசரமாகவும் நல்ல காரியங்களுக்காகவும் அவர்கள் உழைத்தனர்.

சில இடங்களில் அறிவும் திறமையும் அரசியல் காற்றில் சிக்கி அல்லாடியதும் உண்டு. அதன் விளை வாக அறிஞர்கள் மனமுடைந்ததும் உண்டு.

அமெரிக்க சமுதாய வாழ்வில் அவர்கள் ஒரு மகத்தான முத்திரையைப் பதித்தனர்.

அமெரிக்க ஜனாதிபதி பதவியைப் பின்னால் ஏற்ற ஜான் கென்னடி, அதைப்போலவே ராபர்ட் மக்நமாரா, மக்ஜார்ஜ்பண்டி, வால்ட்ராஸ்டோ, ஆர்தர் ஷிலீசிங்கர், தியாடோர் சோரன்சன் என்ற அறிஞர்களை, திறமை சாலிகளைத் துணைக்கு அழைத்துக் கொண்டார்.

இதனால் ஜான் கென்னடியின் மூன்று ஆண்டு ஆட்சி ஒரு சரித்திர முக்கியத்துவத்தைப் பெற்றது; சாதனைகளால் நிறைந்தது.

இந்த அமைப்பின் தொடர்ச்சியில் வந்தவரே கிஸ்ஸிஞ்சர்கூட.

ஆட்சி என்பது பெரும் பொறுப்பு. மக்களுக்கு வாக்குக் கொடுத்தவர்கள், அதை நிறைவேற்ற முயல வேண்டும். ஒரு தனித்தலைவனாலோ அல்லது அவனுக்கு வேண்டியவர்களாலோ நாட்டிற்கு அதிக நன்மை ஏற்படுவதில்லை. தலைவனின் வாக்குறுதிகளை நிறைவேற்ற எண்ணங்களைச் சாதனையாக்க ஓர் அறிஞர் குழு வேண்டும்; திறமைசாலி குழு தேவை.




# 12

'நாட்டின் எதிர்காலப் போக்கை ஒரு தலைவன் எப்படி கணிக்கிறான்.' என்பதைப் பொறுத்தே ஒரு தலைவனது தலைவிதி நிர்ணயிக்கப்படுகிறது. மக்கள் ஒரு பிரச்சினையை எப்படி அணுகுவார்கள் என்ற அவனது எண்ணம் பின்னால் காலப்போக்கில் உண்மையாகும்போது, அவன் மகத்தான தலைவனாக மதிக்கப்படுகிறான். தலைவனுக்கு ஒரு நல்ல எதிர்காலக் கண்ணோட்டம் வேண்டும். இதுதான் தலைவனுக்கு வேண்டிய மிக முக்கிய திறமையாகும். இதில்தான் தலைவனின் வெற்றியும் தோல்வியும் அடங்கி இருக்கிறது.

நாட்டு மக்களின் நினைப்பு நாட்டில் நிலவிய நெருக்கடி நிலைமையைப் பற்றி இருக்கும்போது, நாட்டின் பிரதமர் இந்திராகாந்தி எடுத்த முடிவு சரிதானா இல்லையா என்னும் எண்ணம் எல்லோருள்ளும் நிலவுவது இயற்கை. ஆட்சியின் அன்றாட அலுவல்களில் அகப்பட்டுத் திசை தடுமாறும்போது தலைவன் சிலசமயம் துணிந்து ஓர் அதிர்ச்சி வைத்தியம்

செய்கிறான். நாடு பிழைக்கிறது. தலைவனது அனு மானம் தவறும்போது தலைவன் தூக்கி எறியப் படுகிறான்.

மிகுந்த தீர்க்கதரிசனம் கொண்டவர் என்று பாராட்டப் பெற்ற அமெரிக்க ராணுவ தளபதி ஜெனரல் மக் ஆர்தர், தென்கொரியாவில் சைனா போரில் ஈடுபடாது என்ற நோக்கில் திட்டங்களை அமைத்தார். அவர் அனுமானம் பின்னால் தவறாகப் போயிற்று. அதேபோல பிரிட்டிஷ் பிரதமர் வின்ஸ்டன் சர்ச்சில் ஹிட்லர் படையெடுப்பைப் பற்றி அவ்வளவு சரியாகச் சொன்னவர்,—இந்திய தேசிய இயக்கத்தின் வலிமையைப் பற்றி தப்புக்கணக்குப் போட்டார். 'அரை நிர்வாணப் பக்கிரி' என்று காந்தியைத் தூற்றிய அலட்சியம், இந்தியாவின் சாத்வீகப் போராட்டத்தின் வலிமையைப் பற்றி அவரைத் தவறான அனுமானத்தில் இறக்கிவிட்டது.

தலைவர்களின் தீர்க்கதரிசனம் மூலமாகவே தலை வர்கள் மக்களின் நல்ல அபிப்பிராயத்தில் தொடர்ந்து ஆட்சி புரிகின்றனர்.

ஸ்டாலின் காலம், மா சே துங்கின் சகாப்தம் கென்னடி ஆண்டுகள், கிஸ்ஸிஞ்சரின் பதவி காலம், நேருவின் இருபதாண்டு ஆட்சி, காந்தியத் தலைமுறை என்று புல தலைவர்கள் சரித்திரத்தில் நிரந்தர இடம் பெறுவதைக் காண்கிறோம்.

நாட்டின் சூழ்நிலை அவர்கள் மீது முத்திரையைப் பதித்ததா அல்லது இருந்த சூழ்நிலையை எடுத்துக் கொண்டு போராடி அதைத் தலைவர்கள் மாற்றி அமைத்தார்களா என்று கேட்டால் பதில் இரண்டின்

விளைவுகளும்தான் என்றே கிடைக்கும். எனினும் சூழ்நிலையை வெல்லும் மனிதனே மகத்தான தலைவனாகிறான். அவன்தான் தன் விதியையும் ஒரு நாட்டின் விதியையும் நிர்ணயிக்கிறான்.

ஒரு குறிப்பிட்ட தலைவனது மறைவு அல்லது சாவு, நாட்டின் போக்கையே மாற்றிவிடுகிறது என்று சரித்திராசிரியர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். பொதுவாக, தங்கள் தீர்க்கதரிசனத்தாலும், முயற்சியாலும், தங்கள் எண்ணங்களாலும் சூழ்நிலையை மாற்றி அமைப்பதாகவே தலைவர்கள் நம்புகிறார்கள். உண்மையில் அவர்களது சூழ்நிலை அவர்களது எதிரிகளாலும் போட்டியாளர்களாலும், சிலசமயம் சொந்த சகாக்களினாலும் உருவாக்கப்படுகிறது.

கிஸ்ஸிஞ்சர் என்ற தனிமனிதர் உலக அரங்கில் சமாதானத் தூதுவராகப் பாடுபடுகிறார்; நமது நாட்டில் ஜி. பார்த்தசாரதி என்ற தனிமனிதர், இத்துணை நாள் புரையோடிக் கிடந்த ஷேக் அப்துல்லா—காஷ்மீர் சிக்கலுக்கு ஒரு வழி கண்டுபிடித்தார்.

இந்தியாவைப் போல் சம பலம் வாய்ந்த நாடு என்ற மமதையில் வாழ்ந்த பாகிஸ்தானும், அதை ஊட்டி வளர்த்த வெளிநாடுகளும் அவமானம் அடைய இந்திராகாந்தி கிழக்கு பாகிஸ்தானத்தைத் துண்டித்து, பங்களாதேஷை உருவாக்கினார். எல்லாம், தலைவர்கள் என்ற தனிமனிதர்கள் செய்யும் வேலை. சூழ்நிலையைப் பயன்படுத்தி சூழ்நிலையை வென்ற வேலை.

எனினும் ஒரு தலைவன் தனது செயல்கள் மூலம் முழுக்க முழுக்க ஒரு நாட்டை மாற்றிவிட முடியும் என்பது சரியல்ல. ஒரு சர்வாதிகாரிகூட தனது நாட்டின்

பூகோள அமைப்பினாலும், நாட்டு சரித்திரத்தாலும் கலாசாரத்தாலும் நெருக்கப்படுகிறான். எதையும் அனுசரித்து அவன் காரியம் செய்யவேண்டி இருக்கிறது. பாகிஸ்தானத்து ராணுவ தளபதி அயூப்கான் ஆட்சிகூட எதிர்பார்த்த பலனைக் கொண்டு வர முடியவில்லை. தன்னைவிட முட்டாளும், தன்னைவிடத் திறமை இல்லாதவனும் ஆன யாகியாகானிடம் அவர் தன் பதவியை முடிவில் விட்டு விட்டுக் கீழே இறங்க வேண்டியதாயிற்று. அதையேதான் அமெரிக்க ஜனாதிபதி கென்னடி கூறினார். "பதவிக்கு வெளியே இருந்தபோது எல்லாவற்றையும் ஆட்சி ஏற்றவுடன் எளிதில் மாற்றிவிடலாம் என்று எண்ணினேன். அது அவ்வளவு எளிதல்ல என்ற உண்மை, ஆட்சியை ஏற்றவுடன் தெரிந்தது."

அமெரிக்க ஜனாதிபதிஆபிரகாம் லிங்கன் ஒரு கடிதத்தில் தன் நண்பருக்கு எழுதினார், "நான் சம்பவங் களைக் கட்டுப்படுத்தவில்லை. சம்பவங்கள் என்னை ஆட்டுவிக்கின்றன" என்று. ஜெர்மனிக்கு எதிராகப் போர் தொடுத்த சர்ச்சில் கூறினார்: "பிரிட்டனின் மக்களுக்கு சிங்கத்தின் இதயம் இருந்தது. அதற்கு ஒரு கர்ஜனையைச் சேர்க்கும் பாக்கியம் எனக்குக் கிட்டியது." இப்படி ஜெர்மனிக்கு எதிராகப் பூரித்தெழுந்த பிரிட்டிஷ் மக்கள் ஓர் இரண்டாண்டுகளுக்கு முன் ஜெர்மனிக்குப் பணிந்து போய், நெவில் சேம்பர்லின் ஜெர்மனியுடன் ஓர் உடன்பாடு செய்தபோது கையாலாகாதவர்களாய் முனகிக் கொண்டிருந்தார்கள்.

ஒரே சூழ்நிலை, ஆனாலும் வேறுவேறு தலைவர்கள் அவர்கள் மனோபாவத்திற்கேற்ப, அனுபவத்திற்கேற்ப, வளர்ந்த விதத்திற்கேற்ப சிக்கல்களில் முடிவு காண்

கிறார்கள். அதுதான் சேம்பர்லினுக்கும் சர்ச்சிலுக்கும் உள்ள வித்தியாசம். பாகிஸ்தான் யாஹியாகானுக்கும் இந்திராகாந்திக்கும் உள்ள வித்தியாசம்.

தலைவன் சூழ்நிலையை உருவாக்குகிறானா அல்லது சூழ்நிலை தலைவனை உருவாக்குகிறதா?

கஷ்டமான கேள்வி.

தலைவன் சூழ்நிலையிலிருந்து வந்தவன். சூழ்நிலை இனந் தெரியாதபடி தலைவனுடன் கலந்திருக்கிறது. தீர்க்கதரிசனமும் துணிவும் கொண்ட தலைவன் சூழ் நிலையைத் தனக்குச் சாதகமாக மாற்றி, தன் எண்ணங் களை நிறைவேற்றுகிறான். கற்பனையும் துணிவும் கொண்ட தலைவனாலேயே சரித்திரங்கள் நிகழ்கின்றன.




## 13

**சா**தாரண காலங்களில்—சமுதாய அமைப்பில் மாற்றம் தேவைப்படாத நேரங்களில்—வழக்கமான அரசியல்வாதியே பதவியை (Routine Leaders) நிரப்பு கிறான். அறிஞர்கள் நுழைவதில்லை. அறிஞர்கள் அப்போதெல்லாம், அரசியலைத் தூர இருந்து கவனிக்கிறார்கள். அவ்வப்போது தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்கிறார்கள். அப்போதெல்லாம் கருத்துக்கும் காலத்துக்கும் ஒவ்வாத மனிதனாக அறிஞனை சமுதாயம் கருதுகிறது.

புரட்சிக் காலங்களிலோ அறிஞர்கள் முன்னிற் கிறார்கள். பதவியிலும் அதிகாரத்திலும் நுழைகிறார்கள். சமுதாயத்தை மாற்றி அமைக்க முயலுகின்றனர். சரித்திரத்தின் கனம் நிறைந்த நேரங்கள் அவை. அப்படிப் பொது வாழ்வில்—அரசியலில் புகுந்தவர்கள் தான் நேரு, கென்னடி போன்றோர். அப்படிப்பட்ட ஒரு மாற்றத்தின் முதல் தலைவனாகத்தான் அண்ணா தோன்றினார். வாழ்க்கை நெறிகள் இல்லாத கூட்டத்தினால் அந்தப் பரம்பரையின் தன்மை மாறியது.

அவர்கள் ஆண்ட காலம் குறுகியதாக இருக்கக் கூடும். ஆனால் ஒரு நல்ல சமுதாய அமைப்பிற்கு அவர்கள் அடிக்கல் நடுகிறார்கள். பல சமயம் அவர்கள் அன்றாட அரசியலால் தங்கள் லட்சியங்களை மட்டுப்படுத்திக் கொள்ளவும் மாற்றிக் கொள்ளவும் வேண்டிய நெருக்கடி நேர்கிறது. அறிஞர்கள் எப்போதும் காலத்துக்கு முன் நிற்பவர்கள். புதிய நோக்கையும், புதிய லட்சியங்களையும் கொண்டு நாட்டிற்கு வருபவர்கள். இதற்கு மாறாக அன்றாட அரசியல் வாழ்க்கைக்கு அவர்கள் ஈடு கொடுக்கத் துவங்கும்போது, அவர்கள் வெறும் அரசாங்க அதிகாரிகளாக மாற வேண்டியிருக் கிறது. இது அவர்கள் இயல்புக்கு ஒவ்வாத ஒன்று.

தலைவனது போக்கும் அறிஞர்களது போக்கும் வெவ்வேறானவை. அதை இருவரும் உணர்ந்து மதித்துச் செயல்படும்போது நாடு உயர்கிறது. புதிய உலகம் உருவாகிறது. அப்படி இல்லாமல் 'அறிஞர்கள் அரசியலுக்கு ஏற்றவர்களல்ல' என்று அறிஞர்களைத் தள்ளிவிடும் அரசியல்வாதி, எம். ஜி. ஆர். அப்படி அறிஞர்களைக் கண்டு பயந்தார். ஒதுங்கினார். வெறும் பதவியை நிரப்பும் மற்றொரு மனிதனாக—இருக்கிற நிலைமையைச் சமாளிக்கும் தலைவனாக—ஆட்சியை முடித்துக் கொள்கிறான். 'லட்சியமில்லாத தலைவன்' என்று தலைவனைத் தூற்றிவிட்டுப் பொது வாழ்வி லிருந்து வெளியேறும் அறிஞன், கசந்த அனுபவங்களை மெல்பவனாக, சமுதாயத்தைத் திட்டிக்கொண்டு வாழும் தனிமனிதனாகத் தன் வாழ்வை முடித்துக் கொள்கிறான். அரசியல்வாதியும் அறிஞனும் ஒருவரது எல்லைகளை மற்றவர் உணர்ந்து செயல்படும்போது மக்கள் வாழ்வு மேம்படுகிறது. சரித்திரத்தின் பொற்

காலம் உருவாகிறது. இதைத்தான் 1932லிருந்து திரும்பத் திரும்ப அமெரிக்காவில் பார்க்கிறோம். அறிஞர்களும் தலைவனும் சேர்ந்து நாட்டை நடத்திச் செல்லும் சிறப்பைக் காண்கிறோம்.

அறிஞர்கள் சமுதாயத்தின் மனச்சாட்சியாக எழுகிறார்கள். அல்லல்பட்டு ஆற்றாது அழுத கண்ணீரின் பிரதிநிதியாக எழுகிறார்கள். அங்கே புரட்சி உருவாகிறது. காற்றில் வீரம் தெறிக்கிறது. மண்ணில் ரத்தம் கொப்பளிக்கிறது. நேச்சவ் பாகுனின் கூறுகிறார்: "புரட்சியாளன்—தன்னை அர்ப்பணித்துக் கொண்டவன். அவனுக்குச் சொந்த ஆசைகள், தொடர்புகள், தொழில், உடைமை என்று ஏதும் இல்லை. தன் பெயரைப் பற்றிக்கூட அவன் கவலைப்படுவதில்லை...!"

எல்லா சக்திகளும் அவனிடத்தில் ஓர் எண்ணமாக, கொள்கையாக சங்கமமாகின்றன. அதன் விளைவாகவே புரட்சி எழுகிறது; அறிஞன் அப்போது தலைவனாகிறான். புரட்சியின் கருவியாகிறான். அத்தகைய மாபெரும் புரட்சியைக் கொண்டு வந்தவர்களே லெனின், காந்தி போன்றோர்.

இருக்கிற நிலையில் நொந்து, திசை தெரியாது புழுங்கும் நமது ஊர் படித்தவர்கள்—அறிவாளிகள்—புரட்சியின் சரித்திரங்களைப் படிப்பது நல்லது; அங்கே அறிஞர்களின் சாதனைகளை அறிவது பயன் தரும்.

சரித்திரத்தில் அப்படி இரு பெரும் புரட்சிகள் நிகழ்ந்தன. அவ்விரண்டிலும் அறிஞர்கள் பங்கு பெற்றார்கள். அறிஞர்கள் தலைமை ஏற்றார்கள். ஒன்று பிரெஞ்சுப் புரட்சி, மற்றையது ரஷ்யாவின் மார்க்சிசப் புரட்சி. பிரெஞ்சுப் புரட்சி அறிவாளிகளால் நிகழ்ந்தது.

பகுத்தறிவின்பால் நிறுவப்பட்ட ஒரு புது சமுதாயத்தை அமைக்க விரும்பினர் பிரெஞ்சு நாட்டு அறிவாளிகள். அங்கே மருத்துவர்களும், வழக்கறிஞர்களும், மத குருமார்களும், நடிகர்களும் இருந்தனர். ரூசோ எழுதிய தத்துவம் அவர்களைக் கவர்ந்தது; அண்ணா எழுதிய அறிவுக் கருவூலங்கள் தமிழ் இளைஞர்களைக் கவர்ந்தது போல. அவர்களிடம் அரசை மாற்றி அமைக்கும் தெளிவான மாற்றுத் திட்டம் கையில் இருந்தது. நமது ஊரிலோ தெளிவான மாற்றுத் திட்டங்களை வைத்து மக்களை அழைக்கும் எதிர்க்கட்சிகளைக் காண்பது அரிதாயிருக்கிறது. புரட்சி பற்றிப் பேசும் ஜயப்பிரகாஷ் நாராயணனை எண்ணுகிறேன். இங்கே ஆளும் அரசின் குறைகளைப் பெரிதுபடுத்துபவர்கள், மாற்றுத் திட்டமேதும் இல்லாதவர்களாக "அரசைப் பிடிப்போம். அப்புறம் பார்த்துக்கொள்ளலாம்" என்று சொல்கிறார்கள். இது தலைமையின் ஆக்க சக்தியின்மையே—ஞான சூன்யத்தையே காட்டுகிறது.

"தனி மனிதன் பொது சமுதாயமாகத் தன்னை உணரும்போது நமது புரட்சியின் லட்சியம் நிறைவேறும்" என்றான் பிரெஞ்சுப் புரட்சித் தலைவன் ராப்ஸ்பியர். ராப்ஸ்பியர் ஓர் இனிமை மிகுந்த மனிதன் சொந்த வாழ்வில். வழக்கறிஞன் தொழிலால். ஆனால் புரட்சியின் விளைவாக 'அதிகாரம் மூலம்தான், மாற்றங்களை நிகழ்த்தலாம்' என்ற முடிவுக்கு வந்தான். சர்வாதிகாரியானான். கொடுமை மிகுந்தவனானான். முடிவில் புரட்சிக் குழுவின் அங்கத்தினர்களே அவனைக் குழுவிலிருந்து நீக்கினார்கள்.

முடிவில் அந்த அறிஞன்—தலைவன்—கூறினான்: "நான் ஆளப் பிறந்தவனல்ல. குற்றவாளிகளுடன்

போராடவே பிறந்தவன்” என்று மனம் நொந்து கூறி கீழிறங்கினான்.

ரஷ்யப் புரட்சியிலும் அறிஞர்கள் பங்கு கொண்டார்கள். இல்லாவிட்டால் ஒரு லட்சியத்திற்காக, இப்படியொரு புரட்சி நிகழ்ந்திருக்காது.

ரஷ்ய ஜாரின் ஆட்சியில் படித்தவர்களும் பட்டதாரிகளும் ஒடுக்கப்பட்டார்கள். அப்புறப்படுத்தப் பட்டார்கள். அதிகாரிகளோ, அறிஞர்களை மதிக்க வில்லை. பாட்டாளிகளை ஒன்று சேர்க்க முயன்றபோது, உழைக்கும் மக்கள் அறிஞர்களின் கருத்துக்களில் அசட்டை காட்டினர். படித்தவர்கள் நிலை புரியாது லட்சியத் தீயால் வெந்துகொண்டிருந்தனர்.

சூழ்ந்திருக்கும் உலகை எதிரியாகக் கண்டனர் அறிஞர்கள். நாளடைவில் பாட்டாளிகளை ஒன்று சேர்த்தாலும் ஒரு சிறுபான்மை அறிவாளிகளே இயக்கத்திற்குத் தலைமை ஏற்றனர். 1917-ல் லெனின் சமதர்ம ஆட்சியை நிறுவியபோது, பாட்டாளிகள் ஈடுபட்ட ஓர் அரசை உருவாக்க விரும்பினார். 1919-ல் கூறினார்: “பாட்டாளிகள் பங்கு பெற முன்வரவில்லை. ஆகவே பாட்டாளிகளுக்கான ஓர் அரசை உருவாக்க வேண்டியதுதான் அடுத்து ஆகக்கூடியது” என்றார்.

கட்சியின் கட்டுக்கோப்பில் ரஷ்யாவில் அறிஞர்கள் பதவிக்கு வந்தார்கள். அந்தக் கட்சிக் கட்டுக்கோப்பே நாளடைவில் லட்சியத்திற்கு எதிராக அமைந்தது.

1924-ல் லெனின் இறந்ததும், அறிஞர்களையும் லட்சியங்களையும் இழித்துப் பேசும் ஒரு சிறு கும்பல் கட்சியில் முன்னுக்கு வந்தது. அதன் தலைமையை

ஸ்டாலின் ஏற்றார். அரசாங்க யந்திரத்தில் தலைவர்கள் கவனம் சென்றது, அறிவு புறக்கணிக்கப்பட்டது. சுமார் அரை நூற்றாண்டுக்கு மேலாக சர்வாதிகாரம் தலைமை ஏற்றது ரஷ்யாவில்.

அறிஞர்களால் ஏற்பட்ட புரட்சிகளின் பலன் எதிர்பார்த்த அளவுக்கு நேரவில்லை. அறிஞர்களின் தன்மையும், தலைமைப் பதவியின் தன்மையும், அன்றாட அரசியலின் திறமைத் தேவையும் தனித் தனியே நின்று எதிர்பாராத விளைவுகளை—சர்வாதி காரத்தை ஏற்படுத்திவிட்டன.

மாறாக பிரிட்டிஷ் சமுதாயத்தில், அறிஞர்கள் மேலிருந்து கருத்துக்களைத் தெளிக்காமல், மக்களிட மிருந்து ஒரு சமுதாய உணர்வை உருவாக்கி ஒரு சோஷலிச இயக்கத்தை உருவாக்கினார்கள். அது பலன் தந்தது.

# தலைவனின் மனத் தோற்றம்

## 14

தலைவன் கண்முன் பல சம்பவங்கள் நிகழ்கின்றன; பல செய்திகள் அவனுக்குத் தரப்படுகின்றன. இவற்றிலிருந்து அவன் ஒரு முடிவுக்கு வர வேண்டியதா யிருக்கிறது. எது உண்மை என்று எப்படித் தலைவன் தீர்மானிக்கிறானோ,—எப்படி உலகை அவன் பரிசீலிக்கிறானோ—அதற்கேற்ப அவன் நடந்து கொள்கிறான். சில சமயம் இருக்கின்ற உண்மை நிலையை ஏற்க மறுத்து அவன் முடிவு செய்கிறான். அப்போதெல்லாம் அவனைச் சூழ்ந்திருக்கும் கும்பலுக்கு உண்மையை எடுத்துக்காட்டும் தைரியம் வேண்டும்.

உலகில் பிறரை தவறாகப் புரிந்துகொண்டதாலேயே பெரும் போர்கள் நிகழ்ந்திருக்கின்றன. அமெரிக்கா பெரும் ஏகாதிபத்திய நாடு என்று ரஷ்யாவும், ரஷ்யா சுதந்திரமற்ற கொடுங்கோலாட்சி என்று அமெரிக்கா வும் கருதுகின்றன.

ஒருவரைஒருவர் எப்படிப் பார்க்கிறார்கள். எப்படிப் புரிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பொறுத்தே

உறவு நாட்டப்படுகிறது. தனிமனிதருக்கும் சரி, நாடுகளுக்கும் சரி இது பொருந்தும். நாம் வைத்திருக்கும் அளவுகோலைக் கொண்டு பல சமயம் பிறரை நாம் அளவிட, எடை போட முயல்கிறோம். இதன் விளைவுகளே முதலில் மனஸ்தாபமாகவும், பின்னால் போராகவும் மூள்கிறது. லால்பகதூர் சாஸ்திரியின் சிறிய உருவத்தைப் பார்த்து மதிப்புப் போட்டு, பாகிஸ்தான் அயூப்கான் தன்னம்பிக்கையுடன் காஷ்மீர்மீதும் கட்ச்மீதும் படை எடுத்தார். கென்னடி ஒரு பள்ளிக்கூட மாணவன் என்ற தெம்பில் குருஷ்சேவ் கியூபாவில் அணு ஆயுதங்களைக் குவிக்கத் துவங்கினார். பிடிக்காதவர்களைப் பற்றிக் குழந்தைகள் எண்ணுவது போலவே, நாட்டுத் தலைவர்களும் நடந்துகொள் கிறார்கள். பல சமயம் பல விஷயங்களைச் சிறு பிள்ளைத்தனமாகவும் வஞ்ச மனோபாவம் கொண்டும், தான் என்ற அகம்பாவம் கொண்டும் அணுகுவதைக் காண்கிறோம்.

சொந்த விருப்பு வெறுப்புக்களை நீக்கிவிட்டுத் தனது சுய லாபங்களைத் தூர ஒதுக்கிவிட்டு, என்று தலைவன் விஷயங்களைப் பாரபட்சமில்லாமல் அணுகுகிறானோ அன்றே அவன் எல்லோராலும் நல்லவனாக மதிக்கப் படுகிறான். ஆனால் நல்ல தலைவர்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டிருக்கும் காலம் இது.

இதற்கெல்லாம் காரணம் அவர்கள் வளர்ந்த விதம்; அவர்களுக்கேற்பட்ட முன் அனுபவங்கள்; இதனால் அவர்கள் பெற்ற குணநலன்கள். பிறரைப் பற்றியும் பிற சம்பவங்களைப் பற்றியும் தலைவன் கொண்டிருக்கும் மனத்தோற்றம்; (Perception) அபிப்ராயம்; எண்ணங்கள்.

பல சமயம் பல தலைவர்கள் மாறுபட்ட உணர்வுகளுக்கிடையே போராடுவதாகச் சரித்திராசிரியர்கள் எழுதுகிறார்கள். தலைவனது மனோநிலையே பின்னால் சரித்திரமாகிறது. தன் பதவி பறிபோய்விடுமோ என்ற பயத்தில் துவங்கும் நடுக்கம் வஞ்சினத்திலும், தன் அதிகாரத்தைக் காட்டும் தான்தோன்றித்தனத்திலும் போய் முடிகிறது. என்ன நடக்குமோ என்ற தயக்கம். சில சமயம் அதற்கு நேர் எதிரிடையான 'போனால் போகட்டும்' என்ற சூதாட்ட மனோநிலையைத் தோற்றுவிக்கிறது. தலைவர்கள் இவற்றிற்கு இடையே போராடுகிறார்கள். போராட்டம் அறிவுக்கும் உணர்ச்சிக்கும் ஏற்படுகிறது. இதன் விளைவாக அரசியல் முடிவுகள் தடுமாற்றமடைகின்றன.

ஜான் கென்னடி பெரிய செல்வந்தர் வீட்டுப் பிள்ளையாக வளர்ந்தார். அத்துடன் அவர் சந்தித்த குருஷ்சேவை—ஒரு கிராமிய—சாமர்த்தியம் கொண்ட ஒரு மனிதரை—சேர்த்து வைத்துப் பாருங்கள். மதகுருமாராக ஆவதற்குப் படித்த ஸ்டாலினையும், பிரெஞ்சு நாட்டில் ராணுவப் போர்வீரராக வளர்ந்த டிகாலையும் எண்ணிப் பாருங்கள். அதேபோல் கட்சியின் அதிகாரப் படிகளிலேறி முன்னேறிய ரஷியாவின் தலைவர் பிரஷ்னேவையும், ஒளிந்து மறைந்து இருந்தே ஒரு புரட்சி இயக்கத்தைத் தோற்றுவித்த கியூபாவின் காஸ்ட்ரோவையும் எண்ணிப் பாருங்கள். லால்பகதூர் சாஸ்திரியையும் அண்ணாதுரையையும் எண்ணிப் பாருங்கள்.

அவர்கள் வளர்ந்த விதம் எப்படி அவர்களது குணநலன்களை உருவாக்கியிருக்கிறது. அவர்களது குணநலன்கள் எப்படி அவர்களது உலகைப் பற்றிய

அபிப்ராயத்தை உருவாக்கியிருக்கிறது என்பது விளங்கும்.

அதனால்தான், "ராஜதந்திரிகளாகச் செல்பவர்கள் பிறநாட்டுத் தலைவர்களது ஆசைகளையும், அவர்கள் வளர்ந்த விதத்தையும், அவர்களை ஆட்டிப் படைக்கும் மனோதத்துவத்தையும் ஆராய்ந்து வைத்திருக்க வேண்டும்" என்று பிரெஞ்சு நாட்டு பிரான் குவிஸ்நே என்ற ராஜதந்திரி கூறினார்.

படிப்பைப்போலவே தலைவனது முன் அனுபவமும். மனோதத்துவ நிபுணர் யூரி பிரான்பென் பிரன்னர் 1963-ல் அரசியல்வாதிகளைப் பற்றி ஓர் ஆராய்ச்சி செய்தார். "அரசியல்வாதிகள், தாங்கள் சொல்லி வந்த கொள்கைகளுக்கு ஒத்துவரும் விஷயங்களை மட்டுமே எடுத்துக் கொள்கிறார்கள் என்றும் அதையே பிரமாதமான உண்மையென்று வாதிப்பவர்கள்" என்றும் கூறுகிறார்.

உதாரணமாக, ரஷ்யர்கள் எப்படி மேற்கத்திய நாடுகளை நோக்குகிறார்கள் என விளக்குகிறார். "ரஷ்யாவை நெப்போலியன் படை எடுத்தான். பின், ஜெர்மனி படை எடுத்தது. கடைசியாக, யு-2 என்ற அமெரிக்க உளவு விமானம் ரஷ்யாவில் பறந்தது" என்று கூறி இப்படியாக "மேற்கத்திய நாடுகள் என்றுமே ரஷ்யாவுக்கு வஞ்சம் புரிந்திருக்கின்றன" என்று கோவைப்படுத்துகிறார்கள்.

சைனாவுடன் புது உறவு கொண்ட அமெரிக்கா, புது உறவை அமெரிக்க மக்களிடை விற்பதற்காக, எந்த விதமான புதிய உறவுத்தொடரைக் கதையாகச் சொல்லும் என்று எண்ணிப் பாருங்கள்.

இந்தியா மீது வெறுப்பு கொண்ட பாகிஸ்தான், எந்தவிதமான சம்பவத் தொகுப்பைத் தன் பிரசாரமாக பயன்படுத்துகிறது என்பது கண்கூடு.

தலைவனின் முன் அனுபவங்கள் அவன் முடிவைப் பாதிக்கின்றன; உண்மைதான். தலைவன் முன் அனுபவங்களை இணைத்துத் தன் இஷ்டப்படிப் பொதுமக்களது அபிப்ராயத்தை உருவாக்க எல்லா வித உண்மைகளையும் திருத்திக் கூறுகிறானோ, அப்போதுதான் அரசியல்வாதி பிறக்கிறான். அத்தகைய அரசியல்வாதிகளை எல்லா நாட்டிலும் காணலாம். பொதுமக்களுக்கு அரசியல்வாதி கூறுவதை அலசி ஆராய நேரம் கிடையாது. பொதுமக்களது அறியாமை மீது அரசியல்வாதி அப்போது ஆட்சி செய்கிறான். அப்போது தலைவன் என்ற வார்த்தையின் தரம் குறைகிறது.





# 15

ஒரு சிறு தலைவலியோ, வயிற்றுவலியோ, உடல் நலக்குறைவோ, எவ்வளவோ தூரம் நமது மனநிலையை மகிழ்ச்சி நிலையை மாற்றிவிடுகிறது. அந்தச் சமயத்தில் உற்சாகமாக எதிலும் நம்மால் ஈடுபட முடிவதில்லை. நாம் சக்தி குறைந்த நிலையில் இருக்கிறோம். நாம் அப்போது முக்கியமான பிரச்னைகளுக்கு முடிவெடுப்ப தில்லை. முடிவு எடுக்கக்கூடாது.

அதேபோல்தான் தலைவனும். அவனும் நம்மைப் போல் ஒரு மனிதனே. அவன் விஷயத்தில் சிக்கல்களும், பிரச்சினைகளும் அவன் நலம் பெற்று வருவதற்காகக் காத்திருப்பதில்லை. பல சமயம் நிலைமை காரணமாக தனது சிறு உடல்நலக் குறைவை மறைத்து எப்போதும் போல் நடந்துகொள்ளும் ஒரு நெருக்கடியான நிலையில் அவன் வாழ்கிறான்.

நாட்டின் தலைவனின் உடல் நலக்குறைவு அதனால் அவனுக்கு விளையும் மனநலக் குறைவு காரணமாக பல விஷயங்களை நாடு அனுபவிக்க வேண்டியிருக்கிறது.

சொல்லப் போனால் தலைவனின் தலைவலி, நாட்டின் தலைவலியாக—நாட்டின் தலைவிதியாக மாறிவிடும் துர்ப்பாக்கியமும் நேரிடுகிறது.

சாவதற்கு முன்னால் பலமுறை லெனின் கைகால் இழுக்கப்பட்ட நிலையில், பேச முடியாத நிலையில் இருந்தார். ஸ்டாலினுக்கும், குருஷ்சேவுக்கும் ரத்த அழுத்தம் உண்டு. ஹிட்லரின் பதவிக் காலத்தில் இங்கிலாந்தை ஆண்ட மூன்று முதல் மந்திரிகளும் உடல்நலக் குறைவாலும் மனநலக் குறைவாலும் கஷ்டப்பட்டனர். முசோலினிக்கு ஆண்—பெண் உடல் உறவு நோயான 'சிபிலிஸ்' இருந்தது. அதனால் அவர் மிகவும் கஷ்டப்பட்டார். முசோலினியின் மருமகனுக்கு இத்தாலிய ரகசியப் போலீஸ் தலைவர் இது விஷய மாகத் தாக்கீது அனுப்பினார்; "படபடப்பால் எப்படி முசோலினி கஷ்டப்படுகிறார் என்றும், மருத்துவரிடம் சென்று குணப்படுத்தும் படியும்."

1945 இரண்டாவது உலக மகா யுத்தத்தின் போது ரூஸ்வெல்ட்டின் உடல்நிலை மோசமாயிற்று. யுத்தம் முடிவடைந்த நிலையில் பதவிக் காலத்திலேயே ரூஸ்வெல்ட் உயிர் துறந்தார்.

இரண்டாவது உலக மகாயுத்தத்தின் போது கிழக்கு ஐரோப்பாவை ரஷ்யர்கள் ஆக்கிரமித்த விதம் கண்டு ரூஸ்வெல்ட் வெகுண்டார்; பயந்தார். எனினும் அவரால் எதிராக எந்தக் காரியமும் செய்ய அவர் உடலில் போதுமான சக்தி இல்லை. அவருக்குக் காலமும் இல்லை.

இத்துடன், 1963-ம் ஆண்டு நேருவுக்கு ஏற்பட்ட 'உடல்பிடிப்பு' நோயைப் பற்றி எண்ணிப் பாருங்கள்.

பதினாறு ஆண்டுகள் பதவி வகித்த சுமை; தளர்ச்சி; அத்துடன் வயோதிகம், நாடு முன்னேறவில்லை என்ற மனத்தளர்ச்சி. "பதவியிலிருந்து இறங்குங்கள்" என்று ஒரு சிலரும், "நீங்கள்தான் இந்தியாவைக் காப்பாற்ற முடியும்" என்று ஒரு சிலரும் எழுப்பிய கூக்குரல்கள். இந்திய தேசிய காங்கிரஸ் மாநாட்டில் நேரு திடீரென முடக்கு நோய்க்கும் தளர்ச்சிக்கும் உள்ளானார்.

அதேபோல் பதவிக்கு வந்த ஆறு மாதங்களில் திரு. அண்ணாதுரையின் உடல்நலம் குறைந்தது. அவரது நியூயார்க் சிகிச்சைக்குப் பின் அவர் உடல்நிலை மேலும் தளர்ந்தது. எனினும், தொண்டர் கூட்டம் "நீங்கள்தான் இருக்க வேண்டும் பதவியில்" என்று கூறி அவரது சுமையை அதிகப்படுத்தியது.

பதவியிலிருப்பவர்களை இப்படிப் பாராட்டித் 'தூக்கிவிடும்' கும்பல் எப்போதும் எல்லா நாட்டிலும் இருக்கிறது. வல்லமை படைத்த நல்லவர்கள்—புத்திசாலிகள்கூட இவர்கள் கூறுவதில் ஏமாந்து விடுகிறார்கள். ஏமாந்து, 'ஏதோ நம்மால்தான் நாடு உயிர் வாழ முடியும். நாம் பதவியை விட்டு இறங்கக்கூடாது' என்று நம்பத் துவங்கிவிடுகின்றனர். மாறாக, அமெரிக்காவிலோ, "அவருக்கு உடல் நலமில்லை. அதற்காக நாடு சங்கடப்படக் கூடாது" என்ற நல்லெண்ணத்தில் பத்திரிகைகளும் பொதுமக்களும் விஷயங்களை அணுகுகிறார்கள். தலைவர் தனக்காகவும் நாட்டிற்காகவும் பதவியிலிருந்து இறங்குகிறார்.

அமெரிக்காவில் ஆண்டுதோறும் ஜனாதிபதி உடல் சோதனைக்காக 'வால்டர் ரீட்' மருத்துவநிலையத்திற்குச் செல்கிறார். அவரைப்பற்றி வரும் மருத்துவத்

தகவல்களை நாடு உன்னிப்பாகப் படிக்கிறது. தலைவனின் உடல்நிலை இன்று அமெரிக்காவில் ஒரு தேசிய விஷயமாகி விட்டது.

ஒரு தலைவனின் உடல் நலக்குறைவோ, இறப்போ ஒரு நாட்டின் எதிர்காலப் போக்கைப் பெரிதும் பாதிக் கிறது. ஒரு தலைவனின் உடல் நலம்—மனநலத்தை நம்பி வெளிநாடுகளில் பல அனுமானங்கள், யூகங்கள் செய்யப்படுகின்றன.

இதுவல்லாமல் தலைவனின் மனநலத்தை மட்டுமே பாதிக்கக்கூடிய சம்பவங்கள் பல ஏற்படலாம்; குடும்ப உறவில், கட்சி உறவில், சேர்ந்து செயல்படும் சகாக்களின் உறவில். இவையெல்லாம் எப்படித் தலைவன் என்ற தனிமனிதனைப் பாதித்திருக்கிறது என்பவை வெளியில் தெரியப் போவதில்லை. எனினும் அவற்றின் முத்தி ரைகள், விளைவுகள் தலைவனின் முடிவுகளைப் பாதிக்கின்றன; தலைவன் நடந்துகொள்வதில் தெரிகிறது.

குடும்ப உறவில் ஏற்படும் ஏமாற்றம் ஒரு விரக்தி யிலும், சகாக்கள் எழுப்பும் சந்தேகம் வஞ்சினத்திலும், எதிர்க்கட்சிகள் எழுப்பும் எதிர்ப்பு, தன் பதவி பறிபோய் விடுமோ என்ற பயத்திலும் போய் முடியும் அபாயம் இருக்கிறது. தேர்தலில் தோற்றுப்போன ஒரு கட்சித் தலைவன் தனது சகாக்கள் தன்னைக் கைவிட்டு விடுவார்களோ என்ற பயத்தில் "அவர்களை கட் டாரியால் குத்துவேன் வெட்டுவேன்!" என்று கூவினார். அந்நிலையில் நடந்துகொள்ளும் தலைவனின் செயல்கள் வழக்கத்திற்கு மாறாக இருக்கின்றன. சந்தேகமும் பயமும், கையாலாகத்தனமும் அவனை ஆட்டுவிக் கின்றன. வஞ்சினம், மது, மங்கை என்ற போதைகளில்

அவன் வீழ்கிறான்; அல்லது வேறுபட்ட மனிதனாக அவன் உலவுகிறான்; அடாவடித்தனமான முடிவுகளை எடுக்கிறான்.

இத்தகைய தலைவர்கள் கையில் அணுகுண்டு இருக்கும்போது உலக யுத்தத்தை மூட்டிவிடும் வலிமையும் இருக்கும்போது உலகம் எங்கு போகும் என்று கூற முடியாது.

வாட்டர்கேட் ஊழல்களினால் திண்டாடிப் போய் செயலற்ற நிலையில் இருந்த ஜனாதிபதி நிக்சன், ஒருநாள் திடீரென்று அரேபிய—இஸ்ரேலிய யுத்தத்தைக் காரணம் காட்டி, ரஷ்யப் படையெடுப்பு இருப்பதாக நம்பி, உலகெங்குமுள்ள அமெரிக்கத் துருப்புக்களை யுத்தத்திற்குத் தயாராய் இருக்க வேண்டுமென ஓர் அவசரப் பிரகடனம் செய்தார். அது தேவையுள்ளதா, தேவையற்றதா என்பது வேறு விஷயம். “மனிதனுக்கு மூளை கெட்டுவிட்டது” என்றே பெரும்பாலான மக்கள் அபிப்பிராயப்பட்டார்கள்.

ஒரு தலைவனுக்கேற்பட்ட மனநெருக்கடிகள் விளைவிக்கும் அபாயங்களைக் கவனியுங்கள்.

ஜனநாயக அமைப்பில், தலைவர்களை அறிஞர் களும், பத்திரிகையாளர்களும், பொதுமக்களும் எதிர்க்கட்சிக்காரர்களும் கண்காணித்து வர வேண்டும். இல்லாதபோது மனநோய் பிடித்த தலைவர்கள் எடுக்கும் முடிவில் ஒரு நாடு அல்லலுறும். உடல்நோய் கொண்ட தலைவர்களது முடிவுகள் நாட்டின் இயக்கத்தையே நிறுத்திவிடும்.

இக்கட்டுரை 1978ல் எழுதப்பட்டது. 1987ல் மாநில முதல்வர் எம். ஜி. ஆர் உடல்நலம் குன்றி இருந்தபோது இக்கட்டுரை மீண்டும் பிரசுரிக்கப்பட வேண்டும். பொதுமக்கள் பார்வைக்கு வர வேண்டும் என்று என் வாசகர்கள் பெரிதும் விரும்பினார்கள். பத்திரிகைகள் பிரசுரிக்கத் தயங்கின. எம். ஜி. ஆர். உடல்நலம் குன்றிய நிலையில் இருக்கிறார் என்ற கண்ணோட்டத்தில் மீண்டும் ஒருமுறை இக்கட்டுரையைப் படித்துப் பாருங்கள்.




# 16

எதிர்க்கட்சியினுடைய ஆசைகளையும், அவர்களது கவிழ்க்கும் சதித் திட்டங்களையும் தோற்கடித்துவிட்டு ஒரு தலைவன் தலைமைப் பதவியை அடைகிறான். தலைமைப் பதவி கட்சிக்குள்ளேயோ, அல்லது மாற்றுக் கட்சியிலோ உள்ள இரு மனிதர்களுக்கிடையே நிகழும் ஓர் அதிகாரப் போட்டி; செல்வாக்குப் போட்டி; யாருக்கு வலிமையும் சக்தியும் அதிகம் இருக்கிறதென்னும் திறமையை நிலைநிறுத்தும் போட்டி.

பல போராட்டங்களில் ஈடுபட்டு, அடிபட்டு அதில் ஊறித் திளைத்து, நாள்பட்ட செல்வாக்கினால் ஒரு மனிதன் தலைவனாகிறான். தலைவனுக்கு நன்றாகத் தெரியும்; தன் கையில் எத்தகைய மகத்தான மக்கள் சக்தி இருக்கிறது என்று. மக்களை தான் விரும்பிய வண்ணம் திசை திருப்ப முடியும் என்ற நம்பிக்கையாலும் மக்கள் நடவடிக்கைகளைத் தன் எண்ணங்களாலும் செயல்களாலும் கட்டுப்படுத்த முடியும் என்ற நம்பிக்கையாலும் அவன் செயல்படுகிறான்.

அரசியல் தலைவர்கள் எல்லாவற்றையும் நம்பி விடும் ஏமாளிகளல்ல. அதே போல "மக்கள் பண்புள்ள

நல்லவர்கள்" என்று நம்பிவிடும் 'உண்மை நிலை' அறியாதவர்களுமல்ல. மக்களது நல்ல குணத்தை மட்டுமே நம்பி அவர்கள் பொதுவாழ்வில் இறங்குவதில்லை; முடிவெடுப்பதில்லை. மக்கள் நியாயமான வாதங்களுக்குக் கட்டுப்படுபவர்கள் என்று பூரணமாக நம்பி அவர்கள் எதையும் செய்வதில்லை. நியாயமான வாதத்தைக் கேட்டு மக்கள், "உண்மையைத் தெரிவித்தான் உத்தமன்" என்று சொல்லி அவன் கூறியவாறு நடக்கப் போவதில்லை. இது தலைவனுக்குத் தெரியும். "இதோ ஒரு நல்ல காந்தி வழி காட்டுகிறார்" என்று மக்கள் ஒழுங்கைக் கடைப்பிடிப்பதில்லை. நாம் விரும்பிய காரியத்தைப் பொதுமக்கள் செய்ய வேண்டுமென்றால் ஓரளவு பொது மக்களிடம் அதிகாரத்தைப் பிரயோகிக்க வேண்டும் என்று உணர்ந்திருக்கிறான் தலைவன். தலைவன் கண்டிப்பானவன், துணிச்சல் மிக்கவன். 'பொல்லாதவன்' என்ற எண்ணங்கள் ஒருவித ஆக்கபூர்வமான மனநிலையை நாட்டில் தோற்றுவிக்கின்றன. அப்படிப்பட்ட ஒரு தலைவராக கருணாநிதி திகழ்கிறார் என்று நாம் கூறலாம். மக்களும் அரசாங்கமும் ஒரு சுறுசுறுப்புடன், விழிப்பு உணர்ச்சியுடன் அப்போது நடந்துகொள்கின்றனர்.

நியாயமான வாதங்களுடன், அதிகாரமும் சேரும் போதுதான் காரியங்கள் வேகமாக நடைபெறு கின்றன என்பதைத் தலைவன் உணர்ந்திருக்கிறான்.

ஜெர்மன் நாட்டு சமுதாயப் பேராசிரியர் மேக்ஸ்வெபர் கூறுகிறார்: "உலகம் திருத்த முடியாத அளவுக்குக் கேவலம் அடைந்த போதிலும், அடிமுட்டாள்களாக மக்கள் நடந்துகொண்ட போதிலும் அதைக் கண்டு ஆயாசப்படாமல், 'எப்படியிருந்தாலும்

சரி, என்று எவன் துணிந்து இருக்கிறானோ, நம்பிக்கையுடன் செயல்படுகிறானோ, அவன் அந்தராத்மாவில் அரசியலின் அழைப்பு இருந்துகொண்டே இருக்கிறது." பெருந்தலைவர்கள் பலரும் அத்தகைய அந்தராத்மாவின் குரலைக் கேட்டவர்கள்தான். இந்த மக்களின் அறியாமையையும் வறுமையையும் நீக்க ஒரு காந்தி வந்ததை எண்ணிப் பாருங்கள்.

நாட்டின் லட்சியங்களைத் தங்கள் சொந்த லட்சியங்களாகத் தலைவன் மாற்றிக் கொள்கிறான். நாட்டின் முன்னேற்றத்தையும் வளர்ச்சியையும் தன் வளர்ச்சியாக, தனது சாதனைகளாக, ஒரு நல்ல தலைவன் கருதுகிறான், ஒரு நாட்டின் பொருளாதார வெற்றியிலும், ஒரு தலைவனின் ஆட்சி வெற்றி அடங்கியிருக்கிறது. அது ஏறும்போது தலைவனின் பெருமை உயர்கிறது. நாட்டின் நிலை சரியும்போது தலைவன் நிலை சரிகிறது.

பல தலைவர்கள் ஆட்சி முடிவில் கெட்ட பெயருடன், தலைக்குனிவுடன் பதவியிலிருந்து இறங்கினாலும், தலைமைப் பதவியைப் பிடித்த ஆரம்ப காலத்தில் அவர்களும் நல்லெண்ணமும், நாடு முன்னேற வேண்டும் என்ற லட்சியங்களும் கொண்டிருந்தவர்களே. "நாட்டைக் குட்டிச்சுவராக்குவேன்" என்று மக்களுக்கு வாக்குறுதி கொடுத்துவிட்டு அல்லது சங்கற்பம் செய்துவிட்டு யாரும் கெட்டுப் போவதில்லை.

தலைமை ஏற்றபின் இருக்கும் நிலையைக் கணிப்பதில் ஏற்பட்ட மனோபாவக் கோளாறே அவர்கள் தவறான முடிவு எடுக்கவும், தவறான பாதையில் இறங்கவும் காரணமாகிறது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவன் சில நாளில் பதவியின்

அதிகாரத்தையும் வலிவையும் உணர்கிறான். அதற்குத் தரப்படும் கௌரவமும் அந்தஸ்தும் அவனுக்குப் போதையாக ஏறுகிறது. பிறகு ஒருநாள் அப்பதவிக்கு ஆபத்து ஏற்படும் என்று அவனுக்குத் தெரியும்போது அவன் மனஅளவில் பதறிப் போகிறான். பதவியில்லாத நிலை, அதிகாரமில்லாத நிலை—அவனால் எண்ண முடியாத சகிக்க முடியாத ஒன்றாகிறது. அந்த நிலையில் பதவியைக் காப்பாற்றிக் கொள்ள எதையும் செய்ய வேண்டிய நிலை அவனுக்கு ஏற்படுகிறது. அப்போது நாட்டின் லட்சியங்கள் காற்றில் விடப்படுகின்றன. தன் பாதுகாப்பே உயிர்ப் போராட்டமாக அமைகிறது.

தனது கட்சியில் உள்ள ஒரு குறிப்பிட்ட கும்பல் தவறான காரியங்களில் இறங்கும்போது அவர்களை அவனால் கண்டிக்க முடிவதில்லை; காரணம், அக்கும்பல் அவன் பதவிக்கெதிராக சதி செய்யுமோ என்ற பயம். இதனால் கீழே நடக்கும் குற்றங்களையும் குறைகளையும் கண்டும் காணாதவனாக நடந்துகொள் கிறான். தனது துணிவின்மையை மறைக்க "எங்கே குறை களில்லை?" என்று சமாதானம் செய்துகொள்கிறான்.

இப்படித் துவங்கும் தலைவனின் பதவிப் போராட்டம், நாட்டின் சரிவில் போய் முடிகிறது. அதனால் கீழே நடக்கும் சில கெட்ட காரியங்கள் பூதாகாரமாக தலைவனின் ஒளியையே வெறும் நிழலாக்கி மறைத்துவிடுகின்றன. லட்சிய வெறியுடன் துவங்கிய தலைமையில், லட்சியம் ஓய்வெடுத்துக் கொள்ளும்போது தலைவன் குழம்பிய மனிதனாகிறான்; நாடு திசை திரும்புகிறது.

"ஞானிகள் அரசியல் பதவி வகிக்க வேண்டும்" என்றார் பிளேடோ.

துரதிர்ஷ்டவசமாக ஞானிகளும், யோகிகளும், தெய்வீக உணர்வு கொண்டவர்களும் அரசியல் தலைவனாகப் பதவி ஏற்பதில்லை. அப்படி ஒரு ஞானி நாட்டுத் தலைமையை ஏற்றுக்கொள்ளும் நெருக்கடி வந்தால், அரசியல் போராட்டத்தின் நடைமுறை விதிகளை அவர்கள் உணர்ந்துகொள்ளும் கட்டாயம் ஏற்படுகிறது. அதிகாரத்தைக் கையாளும் சாமர்த்தியங்களை அவர்கள் உணர்ந்துகொள்ள வேண்டியிருக்கிறது. இதன் விளைவாக அரசியலை ஞானி துறக்கிறார்!

தலைவனின் உள்ளத்தில் லட்சிய வெறி முதலில் உருவாகிறது. காலஞ் செல்லச் செல்ல, பதவி வெறி ஏற்பட வாய்ப்பு ஏற்படுகிறது. "பதவியிலிருப்பதே தன் லட்சியங்களைக் காக்கத்தான்" என்று சாமர்த்தியமாகத் தலைவன் கூறும்போது உண்மைத் தலைவன் பேசுகிறானா, கடைந்தெடுத்த அரசியல்வாதி பேசுகிறானா என்ற சந்தேகம் நமக்கு ஏற்படுகிறது. இரண்டையும் வேறுபடுத்திப் புரிந்துகொள்ள அறிவும், அனுபவமும், கூர்மதியும் வேண்டும். பொதுவாக, பெரும்பான்மையான நாடுகளில் பொது மக்களிடம் அது அதிகம் இருப்பதில்லை.

பொதுமக்கள் தங்கள் வாழ்க்கைப் போராட்டத்திலேயே தங்கள் சிந்தையையும் செயலையும் ஈடுபடுத்த வேண்டி இருப்பதால், பொது வாழ்வையும் ஒரு தலைவனையும் மேலெழுந்தவாரியாகத்தான் பார்க்கின்றனர். அதனால்தான் அறிஞர்களும், பத்திரிகையாளர்களும், நீதிமன்றமும், சட்டசபையும், நிர்வாகமும் அரசியல் கடிவாளங்களாக செயல்பட வேண்டும்.

# ஜிம்மி கார்ட்டர்

## 17



கென்னடிக்குப் பிறகு அமெரிக்காவில் மக்களின் பேரபிமானத்தைப் பெற்ற பெரும் தலைவர் ஜிம்மி கார்ட்டர். சாதாரண குடும்பத்தில் பிறந்து, அந்த நாட்டின் மிகப்பெரிய பதவிக்கு உயர்ந்துள்ள அவரைப் பற்றிய ஒரு ஆழ்ந்த படப் பிடிப்பு இது.

"என் பெயர் ஜிம்மி கார்ட்டர். ஜார்ஜியாவில் கடலைக் கொட்டை பயிர் செய்பவன் நான்" என்ற அறிமுகத்துடன், காணும் ஒவ்வொருவரது கையையும் பிடித்துக் குலுக்குகிறார், ஒரு மனிதர். கை குலுக்கி முடிந்ததும் நபரின் முகத்தைப் பார்க்கிறார். அப்போது ஒரு சிரிப்பு; சிரந் தாழ்ந்திய சிரிப்பு; தனது தேங்காய்ப் பற்கள் அனைத்தும் தெரிய ஓர் உண்மையான சிரிப்பு; சத்தமில்லாத சிரிப்பு.

அடர்ந்து நிற்கும் கேசம் நெற்றியின் குறுக்கே விழுந்து புரள்கிறது. அதிலே ஒரு கென்னடியின் சாயல். அந்தச் சிரிப்பிலே ஓர் ஆத்மார்த்த அனுபவம். அறிமுகத் திலேயே ஓர் எளிமை. ஓர் அடக்கம். பேச்சின் குரலிலே தெற்கத்திய மக்களுக்கே உரித்தான இழுத்த பாணி.

கையில் ஒரு பைபிள் புத்தகத்தை வைத்திருந்தா ரானால் ஒரு பாதிரியார் போலவே இருக்கும். பள்ளிக் கூடத்தின் முன் பார்த்திருந்தோமானால் ஓர் ஆசிரியர் என்று எடுத்துக் கொண்டிருப்போம். அவரது கடலைக் கொட்டை விளையும் நிலத்தில் அவரைக் காண நேர்ந் திருந்தால் ஒரு பாடுபடும் விவசாயி என்று போயிருப் போம். இதெல்லாம் எதைத் தெரிவிக்கிறது என்றால் ஜிம்மி கார்ட்டர் ஒரு நம்பக்கூடிய மனிதர். எந்த வேஷம் போட்டாலும் ஒரு நம்பக்கூடிய மனிதர் என்பதை.

அவரை நம்பி அமெரிக்க மக்கள் ஜனாதிபதி பதவிக்கு அவரைத் தேர்ந்தெடுத்திருக்கின்றனர். "உங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமாக என்றும் நடப்பேன்; ஏன் தேர்ந்தெடுத்தோம் என்று எண்ணுமாறு உங்களை வைக்க மாட்டேன்" என்கிறார் கார்ட்டர்.

ஜிம்மி கார்ட்டர் அமெரிக்காவின் 39-வது ஜனாதிபதியாக ஜனவரி 20-ல் பதவி ஏற்றார். ஜிம்மி கார்ட்டரின் வாழ்க்கையில் பலவித அதிசயங்கள், எதிர் பாராத சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன. ஆனால் அந்த அதிசயங்களையும் எதிர்பாராத சம்பவங்களையும் நிகழவைத்தவர் ஜிம்மி கார்ட்டர்.

தான் ஜனாதிபதியாக முடியும் என்று நம்பியவர் ஜிம்மி கார்ட்டர். அதற்கான திட்டங்களை வரிசையாக வகுத்துச் செயல்பட்டவர் அவர். அதிசயங்களையெல்

லாம் மனவலிமையினாலும், செயல் திறத்தினாலும் நிகழ வைத்தவர் அவர்.

சொல்லப்போனால் அவர் ஒரு சாதாரண விவசாயி. ஒரு சாதாரண குடும்பஸ்தர். ஒரு சாதாரண பட்டதாரி. இதில் ஒவ்வொன்றையும் தன் லட்சியத்திற்கு நூறு சதவிகிதம் பயன்படுத்திக் கொண்டவர் அவர்.

அவருக்கு சுமார் 5 லட்சம் டாலர் சொத்திருக்கிறது. கடலைக்கொட்டை விளையும் பூமியாக—2500 ஏக்கர். அவரது குடும்ப வருமானம் சுமார் நாற்பதாயிரம் டாலர் ஆண்டொன்றுக்கு. வசதியான குடும்பம்தான். கடந்த இருபதாண்டுகளில் அவர் விவசாயத்தில் இறங்கி விவசாயத்திலிருந்து வருமானத்தைப் பெருக்கினார். அதற்கு முன் விவசாயம் சும்மா சோறு போட்டுக் கொண்டிருந்த 'ஏனோதானோ' நிலைதான்.

என்ன அதிசயங்களைச் சாதித்து ஜனாதிபதி பதவியைப் பிடித்தார் என்ற கேள்வி ஒரு நியாயமான கேள்வி. எல்லா நாடுகளிலும் அரசியல் அமைப்பில்—கட்சி, கட்சிப் பிரமுகர்கள் என்ற வலுக்கொண்ட அமைப்புகள் உண்டு. அமெரிக்காவில் ஒரு கட்சிஉறுப்பினராயிருந்தால் போதும். அதை வைத்துக் கொண்டு நேரிடையாக மக்களிடை சென்று ஆதரவைத் தேடலாம். அப்படி கட்சி அமைப்பின் உதவியின்றி, கட்சித் தலைவர்களின் ஆதரவின்றி மக்களிடை நேரே பேசியே முதலில் பல இடங்களில் வெற்றி கண்டார். அரசியல் யந்திரங்கள்—அரசியல் பெருச்சாளிகள்—அவர்களது மனிதரான ஹம்ப்ரியை நியமிக்க ஆவலாக இருந்தனர். ஆனால் அரசியல் யந்திரத்தை மீறி ஜனநாயகக் கட்சியின் பிரதிநிதியாக வெளிவந்தார், கார்ட்டர்.

'நான் ஜார்ஜியாவிலிருந்து வருபவன். கடலைக் கொட்டை பயிரிடுபவன் என்றபோது எல்லோர் உள்ளத்திலும் ஒரு நகைப்பு, ஓர் அனுதாபம். 'யார் இந்த ஆள் என்ற ஆர்வம். மக்கள் மனத்தில் அவர் பெயரை யும் முகத்தையும் நினைவில் நிறுத்த அது உதவியது. அரசியலுக்கு—வக்கீல் பட்டம் படித்தவர்கள், டாக்டர் பட்டம் பெற்றவர்கள், ஆயுட் கால அரசியல்வாதிகள், காசு கொழுத்த தொழிலதிபர்கள்தான் வந்துகொண் டிருந்தனர். அந்த உலகில் ஏதோ ஒரு சின்னக் குரல்: "நான் விவசாயி. ஜார்ஜியா மாநிலத்து கடலைக்கொட்டை மனிதன்" என்ற குரல் கேட்கிறது. சில பற்கள் அதனூடே தெரிகின்றன. அமெரிக்க மக்களுக்கு என்றுமே 'எளிமைப்பட்டவன்' என்றால் ஓர் அனுதாபம். ஓர் உதவி செய்யும் மனோபாவம் தோன்றும். அந்த நல்லுணர்வு கார்ட்டருக்குப் பூரணமாகக் கிடைத்தது.

கார்ட்டர் பேசுகிற தோரணை எப்படி என் கிறீர்கள்? உங்களைக் கவர்ந்து சுண்டி இழுத்துவிடும் தன்மை கொண்டது. சின்னச்சின்ன வாக்கியங்களில் பேசுவார். சொல்பவற்றை விளக்குகிறாற்போல் அவரது கை பாவனை செய்யும். பின், அந்த முத்திரைப் பல் தெரியும். சிரிப்பு வெளிவரும். வாக்கியத்தை வேகமாக அழுத்தம் திருத்தமாக ஆரம்பிப்பார். முடியும்போது ஏதோ கடைசி வார்த்தைகளை அவர் விழுங்கி விட்டாற்போலத் தோன்றும். பின் உடனடியாக அந்த முத்திரைப் பல் காட்டும் முகம் தோன்றும். சொல்லும் போது ஆணவம் தெரியாது. எல்லாவற்றையும் கரைத்துக் குடித்தவர் போல் பேசமாட்டார். நமது பக்கத்து வீட்டுக்காரர் நமக்கு விஷயங்களை விளக்குகிறாற் போல, விவாதிப்பது போல விவாதிப்பார். உடன்

அடுத்தகணம் அந்த முத்திரை—அகன்ற உதடு களிடையே மின்னும் பல் அங்கே ஒளிவிடும்.

இயல்பான சிரிப்பு அது. கள்ளங்கபடமற்ற சிரிப்பு அது. நான் உங்கள் நண்பன் என்று கூறும் சிரிப்பு அது. நமது முகத்தில் சிரிப்புக் கோடுகளையும், நமது பற்களை நம்மை அறியாது வெளிப்படுத்தவும் வைக்கும் உண்மைச் சிரிப்பு அது. அதில் சிறிது கூச்சம் இருக்கும். அடக்கம் தென்படும். கார்ட்டூன்காரர்கள் ஜிம்மி கார்ட்டரை இரண்டு பெரிய மாங்காய்ப் பற்களைப் படமாகப் போட்டு, இதுதான் அவர் என்று போட்டுத் தள்ளினார்கள். அது உண்மையான சிரிப்பில்லை என்று நிரூபித்தால் ஜிம்மி கார்ட்டருக்கு சிறந்த நடிப்பிற்குப் பட்டம் கொடுக்க வேண்டியிருக்கும். மாறாக அமெரிக்க அரசியலில் உலகில் ரானால்டு ரேகன் என்ற சினிமா நடிகரும் அரசியலில் இறங்கியிருந்தார். ரானால்டு ரேகனின் சிரிப்பு ஒரு தளுக்குச் சிரிப்பு. கண்களிலே ஆச்சரியத்தையும் முகத்திலே அதிசயத்தையும் வாயிலே சிரிப்பையும் உடலிலே அதற்கான ஆட்டத்தையும் கொண்டுவரும் தளுக்குச் சிரிப்பு. சிரிப்புக்குச் சிரிப்பு தான் எத்தனை வித்தியாசம்.

அரசியல் தேர்தல் என்பது மக்களின் நம்பிக் கையைப் பெறுவது. அந்த நம்பிக்கை "மனிதன் எப்படிப் பேசுகிறார், நடந்துகொள்ளுகிறார், சந்தோஷமாக இருக்கிறார், அவருடைய சரித்திரம் என்ன?" என்பன போன்ற பல விஷயங்களால் ஆனது. ஜிம்மி கார்ட்ட ருடைய சிரிப்பு மக்களை எளிதில் வசீகரித்துவிட்டது.

மனிதரிடம் இந்த 51 வயதிலும் ஓர் இளமை இருக்கிறது. கொத்தான தலைமுடி அடர்த்தியாக முன் நெற்றியில் ஒரு 45 டிகிரி கோணத்தில் விழுகிறது. ஆழ்

மனத்தில், மக்கள் கென்னடியுடன் அத்தகைய உருவத்தை இணைத்திருக்கிறார்கள். இப்போது அத்தகைய உருவம் தோன்றும்போது கென்னடி மீது கொண்ட அபிமானமும், ஆசையும், பாசமும் அவர்களை அறியாது அந்த உருவத்தை நோக்கிப் பாய்கிறது.

தெற்கிலிருந்து கடந்த நூற்றாண்டுகளில் ஒரு மனிதர் ஜனாதிபதியாக வந்ததில்லை. ஒரு நூற்றாண்டுக்குப் பின் கார்ட்டர் வருகிறார். தெற்கு என்றால் அவர்கள் பிரிவினைவாதிகள். லிங்கன் அடிமைத்தனத்தை நீக்கிப் பிரகடனம் செய்தபோது தெற்கு மாநிலத்தார் தென் மண்டலத்தைத் தனிநாடாகப் பிரகடனம் செய்தனர். போர் மூண்டது. போரில் தோற்றனர். தோற்றாலும் தெற்கின் ஆத்மா வடக்கு மாநில மக்களை ஓர் ஆத்திரத்துடனேயே, வேகத்துடனேயே நோக்கி வந்தது. மேலும் தெற்கில் கறுப்பர்கள் அதிகம். தெற்கில் கறுப்பர்கள் நடத்தப்படுவதை அதிகம் பேர் அடிக்கடி சுட்டிக் காட்டி சுட்டிக் காட்டி தெற்கிலுள்ளவர்களுக்கு ஒரு குற்ற மனப்பான்மை ஏற்பட்டது. தங்களை இரண்டாந்தரக் குடிமகனாக வடக்கிலிருப்பவர்கள் கருதுவது போன்ற எண்ணங்கள் தெற்கில் பரவலாக இருந்தன. போதும் போதாதற்குப் பொதுவாக தெற்கு ஏழைமை கொண்ட பகுதி. ஆகவே, தெற்கிலிருந்து யாரும் நேரடியாக ஜனாதிபதி பதவிக்கு, மக்கள் அபிமானத்தைப் பெற்று வரமுடியும் என்பதை யாரும் நினைக்கக்கூட இல்லை. அந்த நிலையில் ஒரு மனிதர் ஜார்ஜியாவிலிருந்து தெற்கிலிருந்து—ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிட்டார்; வென்றார்.

தெற்கில் இன வேற்றுமை அதிகம்தான். எனினும் அதிசயமாக கறுப்பர்களில் 84 சதவிகித மக்கள்

கார்ட்டருக்கே தங்கள் வாக்கினைத் தந்தனர். சகஜமாக தெற்கில் வாழும் கறுப்பர்கள் தெற்கில் வாழும் வெள்ளையர்களை இனவெறியர்களாகவே காண்பதுண்டு. கார்ட்டரோ அதில் தப்பிப் பிழைத்தார். கறுப்பர்களின் ஆதரவைப் பெற்றார்.

கார்ட்டரின் வீட்டுக்கு அருகில் ஒரு கறுப்பு பாதிரியார் இருந்தார். கார்ட்டரின் தோட்டத்தில் பல கறுப்பர்கள் வேலை செய்தனர். கார்ட்டரின் தாய் கறுப்பர்களை மிக மதிப்புடன் நடத்தியது மட்டுமல்ல, தன் குழந்தைகளும் அப்படி நடத்துமாறு இளவயதில் போதித்தார். காலஞ்சென்ற மார்ட்டின் லூதர் கிங்கின் தந்தை—'கடவுள் பல வழிகளில் வேலை செய்கிறார்; பல வழிகளில் தன் காரியங்களைச் சாதித்துக் கொள் கிறார்' என்று கார்ட்டரின் வெற்றி பற்றிக் குறிப்பிட்டார்.

தெற்கிலிருந்து வந்த ஒரு சாதாரண விவசாயி அரசியல் யந்திரங்களை மீறி, அரசியல் ஜோதிடர்களை மிஞ்சி வெற்றி பெற்றிருக்கிறார் என்றால் அதில்தான் அதிசயம் அடங்கியிருக்கிறது.

கார்ட்டர் மாநில கவர்னராக இருந்தபோது ஒரு டெலிவிஷன் காட்சியில் தோன்றினார். மூன்று பேட்டியாளர்கள் முன் கார்ட்டர் போய் அமர்ந்தார். அந்த மூன்று பேட்டியாளர்களும் பல கேள்விகள் கேட்டு அவர் என்ன தொழில் செய்கிறார் என்று கண்டுபிடிக்க வேண்டும் (What is my line) அந்தப் பேட்டியாளர்கள் அவரைப் பார்த்து இவர் ஜார்ஜியா மாநிலத்து கவர்னர் என்று எளிதில் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. அந்த அழகில் இருந்தது கார்ட்டரின் அமெரிக்க அறிமுகம். அந்த நிலையை

ஜிம்மி கார்ட்டர் மாற்றி அமைத்து ஜனாதிபதி கார்ட்டர் என்ற புகழை பெற்றிருக்கிறார்.

ஒரு சாதாரண ஆசையும்—துடிப்பும், திட்டமும்—செயலும், மன உறுதியும் விடாமுயற்சியும் என்னவெல்லாம் செய்யும் என்பதற்கு ஜிம்மி கார்ட்டரின் வெள்ளை மாளிகையை நோக்கிய பயணம் ஓர் உதாரணம்.

ஜிம்மி கார்ட்டர் என்ற பெயர் முதலில் அடிபட்டதும் பத்திரிகைகளும், மற்ற அரசியல்வாதிகளும் (Jimmy! who?) எந்த ஜிம்மி என்று பரிகாசம் செய்தார்கள். இப்போது அப்படிக் கேட்பதில்லை!

ஜிம்மி கார்ட்டர் அடைந்த வெற்றியைத் திரும்ப மனத்தில் எண்ணிப் பார்க்கும்போது ஏதோ அரசியல் பாடப் புத்தகத்தில் ஒரு ருசிகரமான அத்தியாயத்தைக் கட்டங்கட்டமாகப் படிப்பதுபோல் ஒரு பிரமை ஏற்படுகிறது.

தனது குறைகளைப் பற்றி அவர் கூறும்போது, ஒவ்வொரு மனிதனும் தனது மனச்சாட்சியின் மறுபதிப்பு உருவாகிக் குரல் கொடுப்பது போன்று எண்ணுகிறான்.

ஜிம்மி கார்ட்டரின் சாதாரணத் தன்மை நம்மைப் போன்ற மனிதர் என்ற எண்ணம், அதனால் ஏற்பட்ட அந்நியோன்யம் ஜிம்மி கார்ட்டருக்குப் பெரும் அளவில் உதவியது.

கார்ட்டரின் தந்தை ஒரு வியாபாரி; விவசாயி. கறுப்பர்களுடன் பழக விரும்பாத கட்டுப்பெட்டி மனோபாவம் கொண்டவர். "எனது தந்தை என்னிடம் மிகக் கண்டிப்புடன் நடந்துகொள்வார். ஆனாலும் நான் அவரை மிகவும் விரும்பினேன்" என்று, தன் இளமைப்

பருவத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறார். காலை 4 மணிக்கு நிலத்தில் வேலை செய்ய எழுப்பி விடுவாராம் அவர் தந்தை. அந்தக் கண்டிப்பும் நெறிமுறையும் இளங் கார்ட்டர் வாழ்விலும் ஓடுகிறது. தன் தந்தையின் கையில் இளம் வயதில் சுமார் 6 முறை அடிபட்டதை நினைவு கூறுகிறார் கார்ட்டர். தந்தைக்கு மாறாக அவர் தாய் லிலியன் மிகவும் முற்போக்கு உள்ளம் கொண்டவர். தனது 68-வது வயதில் இந்தியாவிற்கு சமாதானப் பணி நிலையத் தொண்டராய் வந்து பம்பாயில் இரண்டாண்டுகள் ஒரு மருத்துவமனையில் 'நர்சா'க வேலை பார்த்தவர். பிள்ளைகள் முன்னுக்கு வர வேண்டும் என்பதில் அக்கறை கொண்டவர். சாப் பிடும் மேஜையில் படிப்பதை ஊக்குவிப்பவர். குழந் தைகள் புத்தகங்கள்மீது தயாள குணம் படைத்தவர். கறுப்பர்களை மதிக்க வேண்டும் என்று குழந்தை களுக்குச் சொல்லிக் கொடுப்பார். பெரிய கார்ட்டருக்கு கறுப்பர்கள் வீட்டின் பின்புறக் கதவைத் தாண்டி நுழைவது பிடிக்காது. நுழைய அனுமதிக்க மாட்டார். லிலியனோ அவர்களை அன்புடன் நடத்துவார். அவர் கள் விவரங்களை விசாரிப்பார். இனவேற்றுமையைப் பெரிதும் பெரிய கார்ட்டர் கடைப்பிடித்தாலும் கறுப் பர்களுக்குப் பண விஷயத்தில் தாராளம் காட்டுவார். பொதுவாக, தாராள சிந்தனை கொண்டவர்.

ஜிம்மி கார்ட்டர் 'பிளெயினஸ்' என்ற கிராமத்தில் பிறந்தார். அதன் ஜனத்தொகை 683. மின்சாரம் கிடையாது. குடிநீர்க் குழாய் கிடையாது. வீட்டுக்கு உள்புறம் 'பிளஷ் அவுட்' வசதி இல்லை. நடுத்தரக் குடும்பம் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் ஜிம்மி கார்ட்டர் தன் சுய சரித்திரத்தில் எழுதுகிறார்:

"2000 ஆண்டுகளுக்கு முன் விவசாய வாழ்க்கை எப்படி இருந்ததோ அப்படி இருந்தது எங்கள் வாழ்க்கை." 'ஏழைமையிலிருந்து முன்னுக்கு வந்தேன்' என்று சொல்லிக் கொள்வதில் எல்லோருக்கும் பெருமை. கார்ட்டரும் அதற்கு விதி விலக்கல்ல!

கார்ட்டருக்கு ஜூலியன் கோல்மன் என்ற ஒரு பள்ளித் தலைமையாசிரியர் இருந்தார். கார்ட்டருக்குப் பன்னிரண்டு வயதாகும்போதே 'போரும் சமாதானமும்' என்ற டால்ஸ்டாயின் புத்தகத்தைக் கட்டாயம் படிக்க வேண்டும் என்று கோல்மன் வற்புறுத்தியிருக்கிறார்.

கார்ட்டரின் மனைவி, ரோசலின் ஸ்மித் என்ற உள்ளூர்ப் பெண். பெண்களைப் பார்க்கும்போது அவர் உள்ளத்தில் எழும் எண்ணங்கள் பற்றி கார்ட்டர் வெளிப்படையாக ஒரு பேட்டியில் கூறியபோது, ரோசலின் சிரித்துக் கொண்டார். 'அவரைப் பற்றி நான் சந்தேகப்படத் தேவையில்லை' என்றார். "ஏதோ நேற்றுப் பள்ளிக்கூடத்தில் புதிதாகச் சந்தித்துக்கொண்ட காதலர்கள் போல கணவனும் மனைவியும் பொது இடங்களில் கைகோத்துக் கொண்டு நிற்பது அழகாக இருக்கிறது" என்று டைம் பத்திரிகை எழுதுகிறது.

கார்ட்டருக்கு கப்பற்படையில் சேர வேண்டும்; கப்பற்படைத் தலைவராய் ஆக வேண்டுமென்ற ஆசை சிறுவயதில் இருந்தே உண்டு. கார்ட்டருக்கு இளவயதில் பல குறைபாடும், சப்பையான பாதமும் இருந்தது. இதன் காரணமாக, தான் கப்பற்படையில் சேருவது பாதிக்கப்படுமோ என்று பயந்து, கோகோ கோலா பாட்டில்களைப் பாதத்தில் உருட்டி, பாதத்தில் வளைவு வரச் செய்ய முயல்வாராம்.

வாஷிங்டன் சட்டமன்ற உறுப்பினரின் சிபாரிசின் பேரில் கப்பற்படை பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்தார். 1946-ல் கார்ட்டர் பதிவு பெற்ற அதிகாரி என்ற பதவியை அடைந்தார். எனினும் அது அவருக்கு பூரண திருப்தியை அளிக்கவில்லை என்று எழுதுகிறார்கள். வாழ்க்கை கஷ்டமாயிருந்தது. அதிலிருந்து நீர்மூழ்கிக் கப்பல் நிர்வாகத்திற்கு மாற்றப்பட்டார். வெளிப்படை யாகப் பேசும் நண்பர்களும், வெளிப்புற வாழ்க்கையும் அவரைப் பெரிதும் கவர்ந்தன. கார்ட்டர் எடுத்த வேலையைக் கருத்தூன்றிச் செய்பவர். அப்பழுக்கில்லாத துப்புரவான சூழ்நிலையும், வேறு விஷயங்களில் கவனம் செலுத்த முடியாத நீர்மூழ்கிக் கப்பல் அமைப்பும் அவருக்கு மிகவும் பிடித்திருந்தது.

சீக்கிரத்தில் தளபதி ரிக்கோவர், கார்ட்டரை அணுசக்தியால் இயங்கும் நீர்மூழ்கிக் கப்பலில் வேலை செய்யத் தேர்ந்தெடுத்தார். கார்ட்டரது வாழ்க்கையில் ஏற்பட்ட மூன்று முக்கிய சம்பவங்களுள், ரிக்கோவரிடம் பயிற்சி பெற்றதை மிகவும் முக்கியமாகக் குறிப்பிடுகிறார் கார்ட்டர். ரிக்கோவர் உயர்ந்த நெறிமுறைகளைக் கப்பல் நிர்வாகத்தில் ஏற்படுத்தினார். அது கார்ட்டர் உள்ளத்தில் மாறாது பதிந்தது. கார்ட்டர் மாநில கவர்ன ரானபோது அவரும் அத்தகைய உயர்ந்த நெறி முறை களைத் தனது சகாக்களும், பணி புரிபவர்களும் அனு சரிக்க வேண்டுமென்று கூறினார். "யாரை நாம் மதிக் கிறோமோ பாராட்டுகிறோமோ அவர்களாக ஆக நாம் நம்மை அறியாது முயற்சிக்கிறோம்" என்கிறார்கள் மனநூலோர். கார்ட்டர் ரிக்கோவரைப் பற்றி எழுது கிறார்: "ரிக்கோவரின் கடின உழைப்பு நம்ப முடியாதது. திறமை மிகுந்தவர் அவர். தன் கீழ் பணி புரிபவர்களிட

மிருந்து முழு ஆதரவையும் நாணயத் தையும் எதிர் பார்ப்பார். நாங்கள் எல்லோரும் அவரைக் கண்டு பயந்தோம். அவரை மதித்தோம். அவரைத் திருப்தி செய்யும் காரியங்களைச் செய்ய முயன்றோம். ரிக்கோவர் வாய்திறந்து பாராட்ட மாட்டார். அதுதான் அவர் பாராட்டும் முறை. தான் நினைக்கிற அளவுக்கு சுத்தமாக ஒரு வேலை செய்யப்படவில்லை என்றால் மனிதன் பொரிந்து தள்ளுவார். எங்களிடமிருந்து அதிகமாக எதிர்பார்த்தார்."

கார்ட்டர் தனது சகாக்களிடமும் வேலை பார்ப்பவர்களிடமும் அப்படியே நடந்துகொள்கிறார் என்று கூறலாம். கார்ட்டர் மனிதாபிமானம் கொண்டவர். ரிக்கோவர் போலன்றி வேலை செய்பவர்களை கார்ட்டர் சமயத்தில் பாராட்டுவார். ராணுவ அமைப்பின் கட்டுப்பாடும், ஒழுங்கும், கீழ்ப்படிதலும் கார்ட்டரது இயல்பாக அவருடன் கலந்துவிட்டன.

1953-ல் கார்ட்டரது தந்தை இறந்து போனார். கார்ட்டரது வாழ்வில் அது பெரிய சோதனையாய் அமைந்தது. கப்பற்படைத் தலைவராய் வர வேண்டு மென்ற ஆசைகளை வளர்த்துக்கொண்டு அதை நோக்கிப் பாடுபட்டுக் கொண்டிருந்தார். அச்சமயத்தில் அவர் தந்தை இறக்கவே, குடும்பத்தின் பொறுப்பு அவருக்கு ஏற்பட்டது. கார்ட்டர்தான் வீட்டில் மூத்த பிள்ளை. அவரது தந்தை சுமார் இரண்டாயிரம் ஏக்கர் நிலத்தைச் சேமித்து வைத்திருந்தார். ஏக்கர்தான் இரண்டாயிரமே ஒழிய, ஒன்றும் பெரிய வருமான மில்லை. தயக்கத்துடனே கார்ட்டரும் அவரது மனைவி ரோசலினும் பிளெயின்ஸிற்கு வந்தனர். வருமானம்

குறைவாய் இருந்தாலும் விவசாயத்தை மேற்கொண்டனர். என்றாலும் ஆசைகளை—பொதுவாழ்வில் இறங்கும் ஆசைகளை—அப்போதே வளர்த்துக் கொண்டனர்.

தனது மூன்று குமாரர்களுடன் வாடகை வீட்டில் வாழ்வைத் துவங்கினார் கார்ட்டர். கடலை பயிரிடுவதில் கருத்து செலுத்தினர். விவசாய வரவு—செலவு கணக்குகளைக் கவனமாகப் பார்த்துக் கொண்டார் ரோசலின். விவசாயத்தைப் பற்றி மேலும் அறிந்துகொள்ள கார்ட்டர் இரவு நேரக் கல்லூரி வகுப்புகளில் சேர்ந்தார். சில ஆண்டுகளில் விவசாய வருமானம் வளர்ந்தது. பிளெயின்ஸில் உள்ள ஐந்து பழைய வீடுகளை விலைக்கு வாங்கினார். பின் கடலைக்கொட்டை உடைக்கும் யந்திரத்தை வாங்கினார். பின்னால், கடலைக்கொட்டையைச் சேர்த்து வைக்கும் கிடங்குத் தொழிலை விரிவு படுத்தினார். இதன்மூலம் ஆண்டொன்றுக்கு அவரது வருமானம் குறைந்தபட்சம் 40,000 டாலர் வரை இருக்கும் என்று மதிப்பிடுகிறார்கள்.

ஜிம்மி கார்ட்டரது பொது வாழ்க்கை, பள்ளிக்கூட போர்டில் உறப்பினர் பதவிக்கு நிற்பதில் ஆரம்பித்தது. அமெரிக்காவில் பள்ளி நிர்வாகம் உள்ளூர் மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் போர்டு மெம்பர்களால் நடத்தப்படுகிறது. பள்ளி நிர்வாக போர்டிற்கு முதலில் கார்ட்டர் நின்று வெற்றி பெற்றார். 1962-ல் மாநில சட்டமன்ற மேல்சபைக்கு—செனட்டிற்கு—நின்று வெற்றி பெற்றார். அவரது வெற்றி கோர்ட் மூலம் கிடைத்த வெற்றி. அதாவது கார்ட்டருக்கு எதிராக,

எதிர்க்கட்சியில் நின்றவர் சார்பில் நிறைய இறந்து போனவர்களின் ஓட்டுக்கள் பதிவாகி இருந்தன. ஆகவே கோர்ட், கார்ட்டருக்கு நியாயமான வெற்றியை அளித்தது.

சட்டசபையில் பயனற்ற விவாதமும், சிறு சிறு கும்பல்களின் செல்வாக்கும் மிகுந்திருப்பதைக் கார்ட்டர் கண்டார். சட்டமன்ற உறுப்பினராக இருப்பதில் எல்லோரையும் சரிக்கட்டிக்கொண்டு செல்லும் நிலை இருந்தது. கார்ட்டர் தான் ஒரு நல்ல 'நிர்வாகி' என்பதை அப்போது உணர்ந்தார். அதன் காரணமாகத் தனது குறிக்கோளை உயர்த்தி மாநிலக் கவர்னராகக் கட்சி சார்பில் தேர்தலுக்கு நின்றார். ஜார்ஜியா மாநில மக்கள் அவரை அதிகம் அறியா விட்டாலும் டெமாகிரடிக் கட்சியின் மூன்றாவது தகுதி யான நபராக ஓட்டுகளைப் போட்டனர். அதாவது அவர் தோல்வி அடைந்தார். கவர்னராக முடியவில்லை.

வாழ்வில் தோல்வியை அதிகம் கண்டிராத கார்ட்டருக்கு கவர்னர் தேர்தலில் ஏற்பட்ட தோல்வி பெரிய சோதனையாக அமைந்தது. "ஏன் தோல்வி ஏற்பட்டது?" என்று மீண்டும் தன்னைத்தானே கேட்டுக் கொண்டார். இதனால் துயரத்தில் மூழ்கிவிட்டதாக அவரே குறிப்பிடுகிறார். ஒரு பேட்டியில் கார்ட்டர் குறிப்பிடுகிறார்: "இதற்குப் பின் நான் செய்த ஏதும் திருப்தி தரவில்லை. வாழ்க்கையின்—மூல காரணத்தைப் பற்றி நான் சிந்திக்கத் துவங்கினேன்."

கார்ட்டர், கிறிஸ்துவ சமயப் பற்றில் ஊறி வளர்ந்தவர். தன்னை ஒரு தீவிர கிறிஸ்துவன் என்று நம்பியவர். இப்போது அதைப் பற்றியே அவருக்கு

சந்தேகம் வந்துவிட்டது. தன்னிடம் கர்வம், தற்பெருமை அதிகம் இருப்பதாக அவருக்குப் பட்டது. பிற மக்களைத் தன் சொந்த முன்னேற்றத்திற்காகத் தான் உபயோகித்துக் கொள்வதாக அவருக்குப் பட்டது. உண்மையில் அது அவரது பெரிய சுய சோதனைப் பருவம் என்று கூறலாம். அரசியலுக்கும், சொந்த மத நம்பிக்கை களுக்கும் பெரிய பிளவு இருப்பதாக அவருக்குப் பட்டது. இந்தச் சமயத்தில் ஒருநாள் அவர் அவரது சகோதரியுடன் மனம் விட்டுப் பேசிய சம்பவத்தை, அவர் வாழ்க்கையில் ஏற்பட்ட மற்றொரு முக்கிய திருப்பமாக அவரது வரலாறு எழுதுபவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

அவரது இளைய சகோதரி ரூத் ஸ்டேபிள்டன் திருமணமானவர். மத நம்பிக்கைகளில் ஊறிய ஒரு மதப் பிரசாரகர் அவர். அவரும் அவரது சகோதரர் கார்ட்டரும், கவர்னர் பதவிக்கு நின்று தோற்றபின் ஒரு சமயம் தோப்பில் நடந்துகொண்டு தங்கள் கருத்துக் களைப் பகிர்ந்துகொண்டார்கள். 'ஜிம்மி சில சொந்தப் பிரச்னைகளால் தடுமாறுகிறார்' என்பதை உணர்ந்த ரூத், கேட்டார்: "கிறிஸ்துவுக்காக எதையும் உன்னால் துறக்க முடியுமா? உனது பணம், வீடு, சொத்து எல்லா வற்றையும்?"

"ஆம்! என்னால் முடியும்!" என்றார் கார்ட்டர்.

"உன்னால் அரசியலைத் துறக்க முடியுமா கடவுளுக்காக...?"

கார்ட்டர் வெகுநேரம் யோசித்தார். பின் கூறினார்: "நான் ஒத்துக்கொள்ள வேண்டும். அது மட்டும் முடியாது."

தனது பதில் கார்ட்டரையே சிந்திக்க வைத்தது. கிறிஸ்துவைவிட—கடவுளைவிட—தான் அரசியலை அதிகம் விரும்புகிறோம் என்ற தெளிவு அவரை அதிர்ச்சி அடையச் செய்தது. ஆனால் நாளடைவில், 'கடவுளும் அரசியலும் இரு வேறு துருவங்களல்ல. மனிதன் தற்பெருமையைத் துறப்பதன் மூலம் மன்னிக்கப்படுகிறான்; கடவுளுக்கு அருகில் செல்கிறான். மக்களை சுயலாபத்துக்கு உபயோகிக்காதபோது, பொது நலத்திற்கு மக்களுடன் போராடும்போது, உழைக்கும் போது மனிதன் கடவுளுக்கு அருகில் செல்கிறான்' என்ற உண்மைகளை உணர்ந்தார். இதன்மூலம் அவர் கிறிஸ்துவ மத நம்பிக்கைகளின்படி, "மீண்டும் புதிதாய்—இரண்டாவது முறை—கிறிஸ்துவனாகப் பிறந்தார்". இந்தப் 'புதிய பிறவி' எடுத்த அனுபவம் அவரை, பென்சில்வேனியாவிலும், மசாசூசெட்ஸ் மாநிலத்திலும் கிறிஸ்துவ மதப் பிரசார மேடைகளில் பங்கெடுத்துக் கொள்ளச் செய்தது.

அமெரிக்காவில் சமயமும் மதமும், அரசியல் வாழ்க்கையிலிருந்து பிரித்து வைக்கப்பட்டிருக்கின்றன. ஓட்டுப் போடும் மக்கள் மதத்தைப் பற்றியும் கிறிஸ்துவ நம்பிக்கைகளைப் பற்றியும் வெளிப்படையாகப் பேசும் அரசியல்வாதிகளை நம்புவதில்லை. அவர்கள் மதத்தை அரசியலுக்கு உபயோகிக்கிறார்கள் என்ற நம்பிக்கை மக்களுக்கு உண்டு. ஒரு மனிதனது மதக்கொள்கைகள், சமய நம்பிக்கைகள் அவனது சொந்த வாழ்க்கை விஷயங்கள் என்பது அமெரிக்க மக்களின் சித்தாந்தம். அமெரிக்காவில் யூத மதத்தினர் இருக்கின்றனர். கறுப்பு இஸ்லாமியர்கள் இருக்கின்றனர். மேலும் கிறிஸ்தவர்கள் கத்தோலிக்கர்கள் என்றும் புரோடெஸ்டெண்டுகள்

என்றும் இரு வேறு பிரிவாக மதச் சடங்குகளிலும், நம்பிக்கைகளிலும் வேறுபடுகின்றனர். ஆகவே கத்தோலிக்கர் ஒருவர்—ஜனாதிபதி பதவிக்கு நிற்பவர், தான் எவ்வளவு 'புனிதமான கத்தோலிக்கர்' என்று பேசினால், புரோடெஸ்டெண்டுகளின் ஓட்டுக்களை இழக்க நேரிடும், அல்லது, வெறுப்புக்கு ஆளாக நேரிடும்.

எனினும், அசாதாரணமான துணிச்சலுடன், கார்ட்டர் பொதுவான தனது மத நம்பிக்கைகளைப் பற்றிப் பேசினார். அவர் குரலில் தொனித்த கனிவு, பணிவு, உண்மை, எளிமை எல்லாம் அவரது ஆதரவை வலுப்படுத்தின. விஞ்ஞான வேகத்தில் ஓடும் ஒரு சமுதாயத்தில் யாரோ அடிப்படைப் பண்புகளைப் பற்றிக் கவலைப்படுவதை அது தெரிவித்தது. இனந் தெரியாத ஒரு பரிவு மக்களை அவருடன் பிணைத்தது. கார்ட்டர் கூறுகிறார்: 'ஆண்டவனே, என்னைத் தேர்தலில் வெற்றியடையச் செய்' என்று நான் பிரார்த் தனை செய்வதில்லை. 'ஆண்டவனே' எது சரியோ அதை என்னை செய்யச் செய்' என்று பிரார்த்திக்கிறேன்.

1970-ல் மீண்டும் மாநிலக் கவர்னர் பதவிக்கு நின்று அவர் வெற்றி பெற்றார். அதன் மூலம் அவரது கடவுள் நம்பிக்கை வலுப்பட்டது. அவரது சந்தேகங்கள், தயக்கங்கள் எல்லாம் மறைந்தன. 'கார்ட்டர் ஒரு வேளை மத வெறியராய் மாறிவிடுவாரோ' என்று மக்கள் பயந்தார்கள் முதலில். ஆனால், கார்ட்டர் பரந்த உள்ளம் கொண்டவர். மாநிலக் கவர்னர் அலுவலகத்தில் அதுவரை நடந்துகொண்டிருந்த பிரார்த்தனையுடன் நடக்கும் காலைச் சாப்பாட்டு நிகழ்ச்சிகளை நிறுத்திவிட்டார். தனது கடவுள் நம்பிக்கைகளைப் பிறர்மீது அவர் திணிக்க விரும்பவில்லை.

ஒரு நாளைக்கு சில சமயம் சுமார் 25 முறை பிரார்த்தனை செய்வதாக அவர் குறிப்பிடுகிறார். அவரது பிரார்த்தனைகள் பலனளிக்கின்றனவோ இல்லையோ, அவரது புத்திசாலித்தனமும் உறுதியும் அவருக்கு வெற்றிகளை அளித்தன.

ஒரு மனிதரைப் பற்றி எழுதும்போது எல்லோரும் அவரது நல்ல குணங்களைப் பற்றி எழுதி, சாதாரண மனிதர்களை அவர்கள் பெற்ற வெற்றியின் காரணமாக அதிமனிதனாக வருணித்துவிடுவதுண்டு. மனிதர்களில் பூரணமான மனிதரை யாரும் கண்டதில்லை. இன்னும் பூரணமான மனிதர்கள் பிறக்கவில்லை. குற்றங் குறைகள் இல்லாத மனிதர்கள் யாருமில்லை. சரித்திர நேரத்திற் கேற்ப சில சமயம் நல்ல குணங்கள் பெரிதுபடுத்தப் படுகின்றன. மனிதனுக்குச் சரிவு வரும்போது அவனது கெட்ட குணங்கள் வெளிவருகின்றன. இதுவே உலக இயல்பாக அமைந்திருக்கிறது. ஆகவேதான் தலைவர் களைச் சரியாக எடைபோடுபவர்கள் சரித்திராசிரியர் கள் என்பது உண்மையாக இருக்கிறது. காலத்திற்கு அப்பால் விருப்பு—வெறுப்பின்றி அவர்களால் மனிதர்களை எடை போட முடியும்.

மனித மனம் பல யோசனைகளாலும் ஆசை களாலும் செயல்படுகிறது. கார்ட்டர் மாநில கவர்னர் பதவிக்கு நின்றபோது இனவெறியரான லெஸ்டர் மேடக்ஸ் என்பவரை துணை கவர்னர் பதவிக்கு ஆதரித்தார். யார் இந்த லெஸ்டர் மேடக்ஸ்?

கறுப்பர்களைத் தனது ஹோட்டலில் உள்ளே விட மறுத்துக் கோடரி கொண்டு விரட்டிய மனிதர். இதற்குப் பின் ஹோட்டலுக்கு வரும் விருந்தினர்களுக்கு ஒரு

சிறிய கோடரியைப் பரிசாக—நினைவாக—வழங்கித் தன் வெறித்தனத்தைப் பிரகடனப்படுத்தியவர் மேடக்ஸ். அதில் பெருமை கண்டவர். இதன் மூலம் மேடக்ஸ் அமெரிக்கா பூராவும் அறிமுகம் பெற்றார். அதை சாதகமாக்கி ஒரு சமயம் ஜார்ஜியாவின் கவர்னராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர், மேடக்ஸ்.

கார்ட்டர் மேடக்ஸிற்குத் தந்த ஆதரவு முற்போக்கு உள்ளம் படைத்தவர்களையும், கறுப்பர்களையும் கலங்கச் செய்தது. "கார்ட்டரைப்பற்றி எப்படி நினைத்திருந்தோம். இவர் இப்படி மேடக்ஸை ஆதரிக்கிறாரே" என்று பலர் கவலைப்பட்டார்கள்.

எனினும் கார்ட்டர் மாநிலக் கவர்னராய் ஆனதும் அவர் எடுத்த முடிவுகளும், செயல்பட்ட விதமும் முற்றிலும் மாறுபட்டதாய் இருந்தது. இனவேற்றுமை பாராட்டிய தலைவர்களின் ஒப்புதலைப் பெற்று பதவி ஏற்ற கார்ட்டர், தனது முதல் பேச்சில் தேர்தல் முடிந்ததும் குறிப்பிட்டார்: "இன வேற்றுமையின் காலம் முடிந்துவிட்டது. கிராமத்து ஏழை, அவன் வெள்ளைய ரானாலும் சரி, கறுப்பராயிருந்தாலும் சரி—ஏழை என்ற காரணத்திற்காக, அவனுக்குக் கல்வியும் வேலையும் நியாயமும் மறுக்கப்படுவது இனி நடக்காது" என்றார்.

அது சிம்ம கர்ஜனை. மேடக்ஸ், "ஆகா! போச்சு! போச்சு! வெள்ளைத் தலைமை கவிழ்கிறது" என்று ஓலமிட்டார். கார்ட்டரைத் திட்டினார்.

மாநில அரசின் எல்லா பதவிகளிலும் கறுப்பர்களை நியமித்தார். கார்ட்டர். வெள்ளையர்களுக்கும் கறுப்பர்களுக்கும் இடையே எழும் தகராறுகளைத்

தீர்க்க இரு இனத் தலைவர்கள் கொண்ட ஒரு குழுவினை நிறுவினார் கார்ட்டர்.

கறுப்பர்களுக்கு ஓட்டு வழங்குவற்கு மாநில அரசாங்கத்தில் ஏதும் தனிப்பட்ட அதிகாரிகளோ, நிறுவனமோ இதற்கென இல்லாததால், மாநிலத்தில் உள்ள பள்ளிக்கூட நிர்வாகிகள் அனைவரும் கறுப்பர்களை அங்கங்கே ஓட்டர்களாகப் பதிவு செய்வார்கள் என்ற உத்தரவைப் பிறப்பித்தார். சிறைச் சாலைகளிலும் மனநோய் மருத்துவமனைகளிலும், ஏராளமாகக் கறுப்பர்கள் நிறைக்கப்பட்டிருந்த நிலையை மாற்ற சீர்திருத்தத் திட்டங்கள் கொண்டு வந்தார். ஒரு சமயம் சட்டமன்ற கறுப்பு உறுப்பினர்கள் நடத்திய விருந்தொன்றுக்கு மாநில கவர்னருக்கு வழக்கமான் அழைப்பை அனுப்பினார்கள். கவர்னர்கள் வழக்கமாக கறுப்பர்கள் விருந்தில் கலந்துகொள்வதில்லை. ஆனால் கார்ட்டர் விருந்திற்கு வருகை தந்தார். சாப்பிட்டார்; உரையாடினார்; உறவாடினார். இந்தச் செய்தி தீப்பொறி போல கறுப்பு மக்களிடையே பரவி மக்களின் நல் லெண்ணத்தை வளர்த்தது. மாநிலத் தலைநகரில் முதல்முறையாக 1971-ல் மார்ட்டின் லூதர் கிங் ஜூனியரின் படத்தைத் திறந்து வைத்தார் கார்ட்டர். அது மட்டுமல்ல, எல்லோரையும் அன்று கறுப்பின மக்களின் போராட்டப் பாடலான ‘தடைகளை மீறி வெற்றி காண்போம்’ (We shall overcome) என்ற பாடலை அங்கே பாடச் செய்தார் கார்ட்டர். கார்ட்டரை மக்கள் நியாயத்தின் நண்பன் என்று பாராட்டுவதில் வியப்பென்ன?

அரசாங்கத்தில் திறமையைப் புகுத்தினார் கார்ட்டர். மாநில அரசாங்கத்தில் 300-க்கும் மேற்பட்டு

நிலவி வந்த அரசாங்க இலாகாக்களைக் கலைத்தார். அவற்றை மாற்றிச் சுருக்கி அமைத்தார். "ஒவ்வொரு முறை நான் அலுவலகத்திற்குள் நுழையும்போதும் ஒரு அநாவசிய இலாகா மூடப்பட்டது" என்று நினைவு கூர்கிறார் கார்ட்டர். மொத்தம் 22 இலாகாக்களை நிர்வாகம் செய்யும் அளவிற்குக் குறைத்தார்.

அரசாங்க இலாகாவில் ஒவ்வொரு முறையும் பட்ஜெட் தயாரிக்கப்படும்போது அதிகப் பணம் கேட்பார்கள். அந்தப் பணம் எதற்கு என்று விளக்கமும் காரணமும் காட்டுவார்கள். கார்ட்டரோ அதிகப் பணத்திற்கு மட்டும் காரணம் கேட்காமல், ஒவ்வோர் இலாகாவின் பணியும் எப்படி முக்கியம், ஏன் அவசியம் என்று ஒவ்வோர் ஆண்டும் காரணம் காட்டச் சொன்னார். தாளை நகர்த்துபவர்கள்—சும்மா மனு எழுதிக் கொண்டிருப்பவர்கள்—என்ற நிலையிலிருந்த அதிகாரிகளை நீக்கினார். தாள் வேலைகளைக் குறைத்தார். இதனால் மாநிலச் செலவு குறைந்தது.

சட்டமன்ற உறுப்பினர்களுடன் அவர் போராடினார். சில விஷயங்களில் அவர்களுக்கு விட்டுக் கொடுத்து காரியங்களைச் சாதித்து சட்டங்களை நிறைவேற்றுவது தலைவர்களின் மரபு. கார்ட்டரோ, நியாயத்திற்காக வாதாடினார். மனிதர்களைத் திருப்திப்படுத்துவதற்காக அல்ல. ஒரு சட்டமன்ற உறுப்பினர் கார்ட்டருக்கு மறைமுகமாக செய்தி அனுப்பினார். "என் தந்தை இந்த இலாகாவில் இத்தனை ஆண்டுகளாக இருக்கிறார். அவருக்கு வேலை உயர்வு கொடுத்தால் நான் கார்ட்டர் கொண்டுவரும் சட்டங்களுக்கு ஆதரவு தருவேன்" என்றார். கார்ட்டருக்குக் கோபம் பொங்கியது. "அந்த மனிதரின்

தந்தைக்கு வேலை உயர்வு தருவதற்காக நான் கவர்னர் பதவிக்கு நிற்கவில்லை. அது ஒருநாளும் நடக்கப் போவதில்லை” என்று குரல் எழுப்பினார் கார்ட்டர்.

நாளடைவில் கார்ட்டர் சிறிய விஷயங்களில் விட்டுக்கொடுத்துப் பெரிய காரியங்களைச் சாதிக்கும் நிலைமைக்கு வந்தார். அப்படிக் கூறுவதைவிட விஷயங் களைச் சமாதானமாகத் தீர்ப்பதில் வல்லவரானார் என்பதே பொருந்தும். கார்ட்டருக்கு ஒரு தீர்க்கமான அறிவு இருந்தது. நாட்டையும் மக்களையும் சரியாகக் கணிக்கும் அறிவுதான் அது. நாட்டின் போக்கு என்ன, மக்கள் எதை விரும்புகிறார்கள் என்பதை காலத்துக்கு அப்பால் நின்று கணித்து உணரும் உள்ளுணர்வு அது. தனது சமுதாய சீர்திருத்தங்களெல்லாம் பைபிளில் கூறியிருக்கும் நல்வாசகங்களின் செயல்வடிவம் என்று கூறினார் அவர். கிறிஸ்துவ மதத்தின் தர்ம சிந்தனை களைத் தான் செயலில் கடைபிடிப்பதாகக் கூறியபோது அவரது எதிரிகள் பதிலிழந்தார்கள். ஜிம்மிகார்ட்டரின் ஆசைகளும் லட்சியங்களும் கண்டு தானே ஆச்சரியப் பட்டதாகக் கூறுகிறார் அவர் தாய் லில்லியன். “மகனே! கவர்னராய் இல்லாதபோது, என்ன செய்வதாக உத்தேசம்?” என்று கேட்டார். “தலைமைப் பதவிக்குப் போட்டியிடப் போகிறேன்” என்றார் கார்ட்டர். “எந்த தலைமைப் பதவி?” என்ற லில்லியனுக்கு, “அமெரிக்க நாட்டின் தலைமைப் பதவிக்கு. நான் அதில் வெற்றி யடையப் போகிறேன், நிச்சயம்” என்ற பதில் வந்தது.

கார்ட்டர் எதையும் முன்கூட்டியே சிந்தித்துத் திட்டம் வகுப்பவர். அப்படி அவரும் அவரது காரியதரிசி ஹேமில்டன் ஜோர்டனும் போட்ட திட்டங்கள்தான் அவருக்கு ஜனாதிபதி பதவி தேர்தலில்

முதல் கட்ட வெற்றியைத் தந்தது. கார்ட்டருக்கு இயல்பாக அரசியல் யூகம் இருக்கிறதென்று கூற வேண்டும். அமெரிக்கா வியட்நாமிலிருந்து பின்வாங்கிய நிலையில், நாட்டில் பொருளாதாரம் சீராக ஓடிக்கொண்டிருக்கும் போது பிரச்சினைகளைக் கிளப்புவது எளிதல்ல. அதற்கு யூகமும், தீர்க்கதரிசனமும், சாமர்த்தியமும் வேண்டும்.

வெளிநாட்டுக் கொள்கைகள் ரகசியத்துடன் மேற்கொள்ளப்படுகின்றன என்று கார்ட்டர் குற்றம் சாட்டினார். நாட்டின் பொருளாதாரம்—குறிப்பாக வேலையில்லா நிலைமை படுமோசமாக இருக்கிறது என்று குற்றம் சாட்டினார். அரசாங்கத்தில் இலாகாக் களும், அதிகாரிகளும் அநாவசியமாக வளர்வதால் பணம் பாழாகிறது என்று குற்றம் சாட்டினார். வரிகள் பணக்காரர்களுக்குச் சாதகமாகவும் ஏழைகளுக்குப் பாதகமாகவும் இருக்கின்றன என்று குற்றம் சாட்டினார். முடிவாக, ஜனாதிபதியாக இருக்கும் ஜெரால்டுபோர்டுக்கு திறமை போதாது, தலைமைக்குணம் இல்லை என்று எடுத்துரைத்தார். அவர் எழுப்பிய பிரச்சினைகள் மூலம் சமுதாயத்தின் பெரும்பகுதி மக்களை—ஏழை மக்களை, கறுப்பர்களைத் தன்வசம் இழுத்துக் கொண்டார். அவர் எழுப்பிய ஒவ்வொரு பிரச்சினையிலும், சவாலிலும் அவரை ஆதரிப்பவர்களின் தொகை அதிகமாகுமாறு பிரச்சினைகளை எடுத்துக்கொண்டார்.

அரசியல் என்பது மக்கள் அபிப்ராயத்தின் மீதும் நம்பிக்கையின்மீதும் கட்டப்படுவது. மக்களின் மனப்போக்கையும் பொதுவான மனோதத்துவங்களையும் அரசியல்வாதி நிறையத் தெரிந்து வைத்திருக்க வேண்டும். உருவம், முகம், சிரிப்பு, தலைமுடி, கடவுள் நம்பிக்கை, பேச்சு, செயல், குடும்பம், இவற்றை

மக்களிடம் வெளிப்படுத்தும் விதம் என்று பலவாகச் சேர்ந்து ஒரு தலைவனைப் பற்றிய மக்கள் நம்பிக்கை உருவாகிறது. ஆதரவு வளர்கிறது. கார்ட்டருக்கு அதில் எண்பது மார்க் கொடுக்க வேண்டும். அதாவது தேர்தலின் தேவைக்கு மேல்.

கார்ட்டர் மிகவும் உண்மையானவர் என்ற நம்பிக்கை ஏற்படுத்தும் நிகழ்ச்சிகள் சில நிகழ்ந்தன. தனது குறைகளை மறைத்து வைப்பது அவசியம் என்பது அரசியல்வாதிகளின் அனுபவம். உண்மை கசப்பாக இருக்குமானால் அதைப் பேசாதிருப்பதே உசிதம் என்பது நடைமுறை அரசியல் சித்தாந்தம்.

ஒருநாள் கார்ட்டரை, பிரபலமான 'பிளேபாய்' மாத வெளியீட்டின் சார்பில் பேட்டி காண வந்தார் அதன் நிருபர். அது கார்ட்டர் தேர்தலுக்கு நின்ற சமயம். பத்திரிகைகளில் எழுதப்படுவது மக்கள் தெரிந்து கொள்ள உதவும் நல்லவழி என்று நிருபர்களை சினேகிதர்களாக அரசியல்வாதிகள் நடத்துவது வழக்கம். பிளேபாய் என்ற மாத இதழ் வழவழப்பான தாளில் பெண்களின் நிர்வாணப் படங்களைப் பெரிய காலண்டர் அளவில் நடுப்பக்கப் படமாக வெளியிடும் ஒரு பத்திரிகை. அதன் கார்ட்டூன்கள், கிசுகிசுக்கள், சிறு குறிப்புகள், நீண்ட கட்டுரைகள் எல்லாம் பொதுவாக ஆடவர்களின் மறைந்து கிடக்கும் தாக உணர்வுகளைத் தீர்ப்பதற்காக வெளியிடப்படும். இதை வெளியிடக் கூடாது என்ற சட்டங்களை எல்லாம் மீறி வாதாடி வெற்றி பெற்று கோடீஸ்வரராய்விட்டார் அதன் பதிப்பாளர் ஹெப்னர். காம உணர்வுகளுக்கிடையே ஓரிரு நல்ல உயர்ந்த கட்டுரைகளையும் கதைகளையும் வெளியிடும் பழக்கம் கொண்டது 'பிளேபாய்' இதழ்.

கணவனுக்கு அதன் ஆண்டு சந்தாவை மனைவி பரிசளிப்பது மனைவியின் பரந்த ஆரோக்கியமான உள்ளத்தை வெளிப்படுத்தும் செயல் என்ற நம்பிக்கை அமெரிக்கர்களிடை வளர்க்கப்பட்டிருக்கிறது. பெரிய பெரிய தலைவர்கள், சிந்தனாவாதிகள் 'பிளேபா'யில் எழுதியிருக்கிறார்கள். ஒருநாள் மாலை ஓய்ந்த நிலையில், தளர்ந்த நிலையில், தனது வழக்கமான கட்டுப் பாடுகளை இழந்த நிலையில் தனது காதல்—காம எண்ணங்களைப் பற்றி கார்ட்டர் தன் பேட்டியில் குறிப்பிட்டார்.

கார்ட்டரைப் பற்றிய பேட்டி 'பிளேபா'யில் வெளி வந்தபோது வேண்டுமென்று பொய்யாக சோடித்து யாரோ எழுதியிருக்கிறார்கள் என்றார் செனட்டர் ஹம்ப்ரி. காரணம் யாராலும் அப்பேட்டியை நம்ப முடியவில்லை.

"நான் என் மனைவிக்கு உண்மையாக நடந்து கொள்வதை வைத்துக்கொண்டு உலகைவிட நான் புனிதமாயிருக்கிறேன் என்று சொல்லிக்கொள்ள விரும்ப வில்லை. கர்வமும் தற்பெருமையும் இல்லாதிருப்பதைத் தான் கிறிஸ்துவ மதம் போதிக்கிறது. நான் தெரிந்து பாவங்களைச் செய்ய முயலுவதில்லை. ஆனால் நானும் மனிதன். என்னையும் உணர்வுகள் ஆட்கொள்கின்றன. நானும் தவறுகள் செய்யச் சந்தர்ப்பங்கள் உண்டு. கிறிஸ்து நமக்குக் கடைப்பிடிக்க முடியாத நெறிமுறை களை வகுத்திருக்கிறார். ஏசு சொன்னார்: 'யார் ஒரு பெண்ணைப் பார்க்கும்போது, மனத்தளவில் காம எண்ணங்களைக் கொண்டிருக்கிறானோ, அவன் விபசாரம் செய்தவன் என்பேன்' என்றார்.

"நான் பல பெண்களைப் பார்த்திருக்கிறேன், மனத்தில் காம உணர்வுகளோடு, மன அளவில் நான் பிற மாதர்களுடன் உறவாடியிருக்கிறேன். இப்படி நான் செய்யக்கூடும்." என்று கடவுள் நினைக்கக்கூடிய ஒன்று நான் செய்திருக்கிறேன். கடவுள் என்னை அதற்காக மன்னிக்கிறார். அதற்காகக் குடும்பத்தை விட்டுவிட்டு வேறு ஒரு பெண்ணுடன் கண்டபடி தூங்குபவனை நான் கண்டிக்கமாட்டேன் என்று அர்த்தமாகாது.

"கிறிஸ்து சொல்கிறார்: 'ஒருவன் தன் மனைவியுடனே வாழ்கிறான் என்பதற்காக, பல பெண்களுடன் வாழும், ஒருவனைவிட அவன் உயர்ந்தவன் என்று சொல்லிவிட முடியாது" என்று.

இதுதான் அவர் அளித்த பேட்டி, மனம் விட்டுச் சொன்ன வார்த்தைகள். ஆனால் பத்திரிகைகளும், அரசியல்வாதிகளும், மத குருமார்களும் இதைப் படித்து விட்டுக் கூக்குரலிட்டார்கள். 'கார்ட்டர் இதைச் சொல்லத் தேவையில்லை. சொல்லி இருக்க வேண்டாம். பிறர் இதையெல்லாம் பற்றித் தெரிந்துகொள்ளத் தேவை யில்லை' என்று அரசியல் பண்டிதர்கள் குறைபட்டுக் கொண்டார்கள். காமத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது சகஜமாகப் பேச்சு வழக்கில் உபயோகிக்கும் வார்த்தை களைக் கார்ட்டர் உபயோகித்தார். நியூயார்க் டைம்ஸ் அந்த வார்த்தைகளைப் பிரசுரிக்க லாயக்கற்றது என்று கூறி மற்றவற்றைப் பிரசுரித்தது. "நல்ல மதப்பற்றும் உண்மையான அனுபவமும் இணைந்த பேச்சு அது" என்று கூறினார் ஒரே ஒரு மதப்பள்ளியின் குருமார். மற்றவர்கள் அனைவரும் கண்டித்தார்கள்.

இதன் விளைவாக கார்ட்டரே தான் அளித்த பேட்டி தவறானது என்றும் மீண்டும் சிந்தித்திருந்தால் அப்பேட்டி அளித்திருக்கமாட்டேன் என்றும் கூறினார்.

உலகிலேயே டென்மார்க், ஸ்வீடன் போன்ற நாடுகளை அடுத்து ஆண் பெண் உறவு விவகாரங்களில் அதிகம் நெறியில்லாத சமுதாயம் அமெரிக்க சமுதாயம். ஆனால், கார்ட்டர் போன்ற ஓர் உண்மையான மனிதர் தனது உண்மையான மன எழுச்சிகளை மனம் விட்டுப் பேசும்போது, ஏதோ தேசீயப் புனிதம் பாழ்பட்டுக் கறை பட்டு விட்டதுபோல் அமெரிக்கப் பத்திரிகைகள் குறை பட்டுக் கொண்டன. சமூகம் மனிதனை முழு மனித னாகக் குறைகளுடன் தழும்புகளுடன் மறு மச்சங் களுடன் பார்க்க விரும்புவதில்லை; ஒரு கற்பனை மனித னாகவே—தேவனாகவே அவனைப் பாவிக்க விரும்பு கிறது என்பதற்கு இந்த நிகழ்ச்சி நல்ல உதாரணம்.

இந்நிகழ்ச்சியினால் கார்ட்டரது ஆதரவு குறையவில்லை. ‘மற்ற யாராவது இப்படிச் சொல்லி மாட்டிக்கொண்டிருந்தால் அதல பாதாளத்திற்குப் போயிருப்பார்கள்’ என்று சில பத்திரிகைகள் அவரது ஆதரவின் வலிமையைப் பாராட்டின. பிரபல கார்ட்டூன்காரர் ஒருவர் சுதந்திர தேவியின் சிலையை வரைந்து, அதை நிர்வாண ரூபத்தில் கார்ட்டர் மனதில் கண்டு மகிழ்வதாகப் படம் போட்டார்! பொது வாழ்வில் இறங்குபவர்கள் அனைவரும் காந்தியைப் போல இருப்பதில்லை. இருக்க முடிவதில்லை. கார்ட்டர் விதிவிலக்கு.

கார்ட்டர் தனிப்பட்ட மனிதர். அவருக்கு நெருங்கிய சினேகிதர் கூட்டம் என்று ஏராளமாக எதுவும்

கிடையாது. மாநில கவர்னர் பதவி ஏற்றதிலிருந்து நம்பகத்திற்குரிய சில மனிதர்களிடம் அவர் யோசனை கேட்கிறார். பல யோசனைகளையும் கேட்டபின், மெதுவாக யோசித்துத் தானே முடிவெடுக்கிறார். அவரது முடிவுகள் பெரும்பாலும் சரியான முடிவு களாக அமைந்திருக்கின்றன.

அவர் பெருமையுடன் குறிப்பிடும் அத்தகைய ஒரு முடிவு ஜனாதிபதியுடன் தேர்தலுக்கு நிற்க துணை ஜனாதிபதியை அவர் தேர்ந்தெடுத்த முறையாகும். அதை அவர் சிலாகிக்கிறார். துணை ஜனாதிபதியாக தன்னுடன் நிற்க, பலரை அவர் பேட்டி கண்டார். பேசினார். அவர்களது குணநலன்களை ஆராய்ந்தார். கடைசியில், இளைஞரும் முற்போக்குவாதியும் இனிய குணநலன்களும் பெற்ற மின்னசோட்டா மாநிலத்து செனட்டர் வால்டர் மாண்டேலைத் தேர்ந்தெடுத்தார். செனட்டர் மாண்டேலின் பேச்சும் நடந்துகொண்ட விதமும் கார்ட்டருக்கு நிறைய ஓட்டுகளைப் பெற்றுத் தந்தன.

கார்ட்டர் தனது மந்திரி சபையைத் தேர்ந்தெடுப் பதிலும் மிகவும் கவனமாக இருந்தார். பேட்டி, விவாதம், பிறரது யோசனைகள் என்று ஆராய்ந்து நல்ல அமைச்சர்களைத் தேர்ந்தெடுத்தார் என்றே கூற வேண்டும்.

எல்லாவற்றிலும் எடுப்பாக நிற்பது, ஐக்கிய நாடுகளின் சபைக்கு அமெரிக்கத் தூதுவராக ஆண்ட்ரூயங் என்ற கறுப்பு இளைஞரைத் தேர்ந்தெடுத்த தாகும். இளைஞன் ஆண்ட்ரூயங், மார்ட்டின் லூதர்கிங்கின் சகாவாக உழைத்தவர். உயர் லட்சியங்கள்

கொண்டவர். காந்தியின் கொள்கைகளிலும், அகிம் சையிலும்—மிகுந்த நம்பிக்கை கொண்டவர். அதேபோல பெண்டிக்ஸ் கார்ப்பரேஷனின் தலைவராகப் பல லட்சம் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்த புளூமெந்தால் என்பவரை நிதி இலாகா காரியதரிசியாக கார்ட்டர் போட்டிருக்கிறார். செல்வம், பெருந்தொழில் கார்ப்ப ரேஷன்கள், அரசாங்கம் எல்லாம் சமுதாயப் பணி செய்ய உதவும் கருவிகள் என்ற அபிப்பிராயம் கொண்டவர் புளூமெந்தால். பொருளாதாரத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர். அமெரிக்காவில் வழக்கமாக நிகழ்வது போலப் பல பல்கலைக் கழகப் பேராசிரியர் கள், நிபுணர்கள் கார்ட்டரது அமைச்சரவையில் இடம் வகிக்கிறார்கள்.

கார்ட்டர் பிடிவாதம் கொண்டவர். தணியாத ஆர்வம் கொண்டவர். பதவி மேல் குறிப்பான நோக்கம் கொண்டவர். தனிமையை விரும்புபவர். சகஜமாக யாருடனும் நெருங்கிப் பழகிவிடுபவரல்ல. ஆகவே அவரை, முன்பு பதவியைவிட்டு இறங்கிய நிக்சனுடன் ஒப்பிட்டு, நிக்சனுக்கும் இத்தகைய குணங்கள் இருந்தன என்று எழுதுகிறார்கள் சிலர்.

நிக்சன் தன்னைப் பற்றிய நம்பிக்கை இல்லாதவர். அதனாலேயே அவர் பயந்து எதிரிகளைத் தொலைக்க பலவித நடவடிக்கைகளை எடுத்தார். கார்ட்டர் அசைக்க முடியாத தன்னம்பிக்கை கொண்டவர். நிக்சன் ரகசியம் கொண்ட மனிதர். கார்ட்டர் தனது காம எண்ணங்களைக்கூட வெளிப்படையாக மனம் விட்டுக் கூறும் இயல்பு படைத்தவர். நிக்சனுக்குப் பதவியைப் பிடிக்க வேண்டும் என்ற ஆர்வம் இருந்ததே ஒழிய, பதவியைப் பெற்றபின் என்ன செய்வது என்னும்

திட்டம் பதவியிலிருந்த முதல் மூன்றாண்டுகள் வரை இல்லை. அடுத்த தேர்தல் வரு முன்பாகத் தேர்தலில் வெற்றி பெறும் நோக்கத்துடன் சீன உறவைப் பலப்படுத்தினார். வியட்நாம் போரையும் நிறுத்தினார். கார்ட்டரோ, "மக்களுக்கு சேவை செய்யப் பதவி ஒரு வாய்ப்பு" என்று கூறுகிறார். அதைச் சந்தேகிக்க ஏதும் காரணம் இல்லை. சமூகத்தின் கீழ்ப்பகுதி மக்களைப் பற்றி அவர் பேசும்போது அவர் பேச்சில் உயிர் தெறிக்கிறது. ஏழை மக்களின் பிரச்சினைகள் குறித்து மனம் நெகிழ்ந்தவராகப் பேசுகிறார்.

கார்ட்டர் சாமர்த்தியம் மிக்கவர். தேர்தலுக்கு நின்ற முதல் சில மாதங்களில் மக்களின் ஆதரவைப் பெற்றார். மக்களின் ஆதரவைப் பெற்றதும், பின் கட்சித் தலைவர்களின்—கட்சி யந்திரங்களின் ஆதரவைப் பெற்றார். அதில் சாமர்த்தியம் இருந்தது. கறுப்பு மக்களின் மாநாட்டுக்குப் போனதிலும், யூதர்களின் கோயிலுக்குச் சென்றதிலும், உழைக்கும் மெக்ஸிகோ மக்கள் கூட்டத்தில் பேசியதிலும் அவர் சாதுர்யம் வெளிப்பட்டது.

அவருக்கு மூன்று பையன்கள். எல்லாம் இருபது வயதுக்கு மேல். கடைசியாக ஒரு பெண். 9 வயதுச் சிறுமி ஏமி. ஏமியைக் கார்ட்டர் வாஷிங்டனில் உள்ள 50 சதம் கறுப்பர்கள் நிறைந்த ஒரு பொதுப் பள்ளிக்கூடத்தில் சேர்க்க இருக்கிறார். இந்தச் செய்தி பொதுவாக மக்களுக்கு வியப்பைத் தந்தது. ஏனெனில் ஒரு ஜனாதிபதியின் மகளோ—மகனோ பொதுப் பள்ளிக்குச் செல்வதில்லை. எப்போதும் தனியார் பள்ளிக்கூடத்திற்கே செல்வார்கள். கார்ட்டரது ஜனநாயக மனோபாவத்தை இது காட்டுகிறது. "இது

எல்லாம் பெரிய ஷோ" என்று கூறும் நம்ப முடியாத மனிதர்களும் இருக்கிறார்கள் அமெரிக்காவில்.

பிளெயின்ஸில் நேற்றுவரை சாதாரண விவசாயி யாக, தன் காரைத் தானே ஓட்டிச் சென்ற மனிதராக இருந்தவருக்கு, இன்று காரின் கதவைத் திறந்துவிடவும் சாத்தவும் ஆள் நிற்கிறார்கள் என்பதை ஏற்றுக்கொள்வது சிரமமாயிருக்கிறது. இன்றும் துணிமணிகள் அடங்கிய தனது பெட்டியைத் தானே அவர் தூக்கிச் செல்கிறார்.

ஜிம்மி கார்ட்டருக்கு பில்லி என்ற ஒரு சகோதரர் உண்டு. பில்லி இப்போது விவசாயத்தைக் கவனித்துக் கொள்கிறார். 683 பேர் கொண்ட பிளெயின்ஸ் ஊருக்கு மேயராக சமீபத்தில் பில்லி நின்றார். பில்லி அறுபது ஓட்டில் தோற்றுப் போனார். 'கையில் அடிக்கடி பீர் பாட்டிலுடன் நிற்பதைக் கண்டுதான் மக்கள் எனக்கு ஓட்டுப் போடவில்லை' என்று சிரிக்கிறார் பில்லி கார்ட்டர்.

கார்ட்டர் ஜனாதிபதியானதும், பிளெயின்ஸ் முக்கியத்துவம் பெற ஆரம்பித்துவிட்டது. பயணிகள் கார்ட்டரது ஊரைப் பார்க்க வருகின்றனர் கூட்டங் கூட்டமாக. நிருபர்கள் அங்கே மொய்த்த வண்ணம் இருக்கின்றனர். டி.வி. கேமிராக்கள் அங்கே நிரந்தரமாக வைக்கப்பட்டிருக்கின்றன. இதெல்லாம் நடக்கும் என்று எதிர்பார்த்த கார்ட்டர், முன்னேற்பாடாக ஊர் பெரிதாக வளர்வதைக் கட்டுப்படுத்தும் நடவடிக்க்கை களை முன்பே செய்தார்.

தேர்தல் நெருங்கிய சமயம். 'போர்டா? (போர்டு ஜனாதிபதி பதவிக்கு நின்ற போட்டியாளர்) கார்ட்டரா?' என்று மக்கள் முடிவு செய்யாத நிலையில்

தனது தேர்தல் பணத்தில் சுமார் 2 லட்சம் டாலர்களை எடுத்து, தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் தான் செய்ய வேண்டிய காரியங்களைக் கவனிக்க ஒரு செயல் குழுவை நியமித்தார் கார்ட்டர். அவரது நெருங்கிய நண்பர்களோ அப்பணத்தைத் தேர்தலுக்குச் செலவு செய்வது நல்லது என்றார்கள். ஆனால் அவரோ ஜனாதிபதி பதவி பற்றி முன்கூட்டித் திட்டமிட்டார். அவர் செய்த முடிவு சரியாக இருந்தது.

அவர் ஒழுங்குமிக்க மனிதர் என்று எழுதும்போது ஏதோ 64 கல்யாண குணங்களும் அமைந்த பூரண கதாநாயகனை வர்ணிப்பது போல் இருக்கிறது. வெளிவந்த செய்திகளை, பிரசுரமான தகவல்களை வைத்துக்கொண்டு எழுதும்போது, இருக்கிற விஷயங் களை வைத்துக்கொண்டுதான் ஒருவரைப் பற்றி எழுதவும் கணிக்கவும் வேண்டியிருக்கிறது. நாளை என்ன செய்வார் என்ற விஷயம் தெரியாத நிலையில், ஒரு மனிதர் என்ன செய்திருக்கிறார் என்பதைக் கொண்டே ஒரு மனிதரை எடைபோட வேண்டியிருக்கிறது. அப்படி எடை போடும்போது கார்ட்டர் எல்லாவற்றிலும் உயர் வாகவே வருகிறார்.

ஒரு சமயம் தனது சகோதரியிடம் கார்ட்டர் கூறினார்: "நான் காலை பத்து மணி வரையில் படுக்கையில் தூங்கிவிட்டு, பின் எழுந்து ஊர் சுற்றப் போகலாம். அல்லாமல் காலை 6 மணிக்கு எழுந்து ஜனாதிபதியாவதற்காக உழைக்கலாம்!; உழைப்பின் ரகசியத்தை அது தெரிவிக்கிறது."

தேர்தலுக்கு முன் கார்ட்டருக்கு மக்களது ஆதரவு சுமார் 30 சதம் போர்டைவிட அதிகமிருந்தது.

ஜனாதிபதி போர்டு, கார்ட்டரை நேரிடை விவாதத்திற்கு அழைத்தார். அமெரிக்க அரசியலில் யார் கீழே இருக்கிறார்களோ அவர்கள் எதிரியை விவா தத்திற்கு வருமாறு சவால் விடுவது வழக்கம். அப்படி ஏற்பட்ட விவாதத்தில்தான் 1960ல் கென்னடியும் நிக்சனும் டெலிவிஷன் முன் தோன்றினார்கள். சந்தேகம் கொண்ட முகபாவத்தினாலும் தெளிவில்லாத பேச்சுக்கள் மூலமும் நிக்சன் போட்டியில் கென்னடி யிடம் தோற்றார். 1960-ல் கென்னடி ஜனாதிபதி பதவி ஏற்றார். அதற்குப் பின் வந்த தலைவர்கள் ஜனாதிபதி பதவிப் போட்டியில், டெலிவிஷனில் விவாதம் நடத்த மறுத்துவிட்டார்கள். இன்றோ ஜனாதிபதி போர்டு விட்ட சவாலை ஏற்று கார்ட்டர் டெலிவிஷனில் பேட்டி நடத்தினார். மூன்று விவாதங்கள் நிகழ்ந்தன. முதல் விவாதத்தில் போர்டு வெற்றி பெற்றதாகவும், மற்ற இரு விவாதங்களில் கார்ட்டர் வெற்றி பெற்ற தாகவும் மக்கள் எண்ணினார்கள். கார்ட்டருக்கிருந்த அசாதாரண தன்னம்பிக்கையை இது காட்டியது.

இந்தியாவைப் பொறுத்தவரை, 'டெமாகிரடிக்' கட்சியின் தலைவர்கள் என்றுமே இந்தியாவின் பால் அன்பும் அனுதாபமும் கொண்டிருந்தார்கள்-பிராங் களின் ரூஸ்வெல்ட், கென்னடி, ஜான்சன் என்று மாறாக, நிக்சன் போன்ற குறுக்குப் புத்தியும் சந்தேக மனப்பான் மையும் கொண்டவர்களது ஆட்சியில் இந்தியா புறக் கணிக்கப்பட்டது. நிக்சன், உலகமே ஏதோ சைனாதான் என்று தலையில் வைத்துக்கொண்டு கொண்டாடினார்.

மாசேதுங்கின் கையைக் குலுக்குவது தனக்குக் கிடைத்த கௌரவம் என்று மகிழ்ந்தார். பங்களாதேஷ் போரில் யாஹ்யாகானுக்கு உதவி செய்ய விரும்பினார்.

போர்டின் ஆட்சியில் அமெரிக்க—இந்திய உறவுகள் சற்று அதிகப்படத் துவங்கின. ஆனால், கார்ட்டரின் ஆட்சியில் உறவுகள் வலுக்கும் என்று இந்தியா ஆவலுடன் எதிர்பார்த்தது.

ஆனால், கார்ட்டர் என்ன நினைக்கிறார் இந்தியாவைப்பற்றி? அணுகுண்டு செய்யும் திறமை உலகில் மலிவதைக் கட்டுப்படுத்த வேண்டுமென்று கவலையுடன் கார்ட்டர் குறிப்பிட்டார். அதில் இந்தியாவின் அணுகுண்டு செய்யும் வலிமை பற்றி அக்கறையுடன் அவர் குறிப்பிட்டார். இந்தியா அணு குண்டு வெடிப்பதை நிறுத்தும் சாசனத்தில் கையெழுத் திடவில்லை. அதன் காரணங்கள், சரியானவையே. எனினும், அமெரிக்க வெளிநாட்டிலாகா இந்தியாவின் போக்கைப் பெரிதும் பாராட்டவில்லை. அமெரிக்கர் களுக்கு இந்தியாவின் அணுகுண்டு வெடிப்பு சோதனை பெரும் உறுத்தலாகவே இன்றும் இருக்கிறது.

மற்றபடி இந்தியாவின் ஜனநாயக அமைப்பையும் பண்புகளையும், மூன்றாவது நாடுகளுக்கு அது தரும் தலைமையையும் கார்ட்டர் உணர்ந்திருக்கிறார் என்றே சொல்ல வேண்டும். அவரது தாய் லில்லியன், இந்தியாவில் பணிபுரிய வந்தார். மேலும் யங் என்ற ஐ.நா. தூதுவர் இந்தியாவின்பால் மதிப்பு கொண்டவர். இந்தச் சூழ்நிலையில் வேற்றுமைகளுக்குச் சமரசம் காணப்படுமென்றும், அமெரிக்க—இந்திய உறவு மேலும் சிறப்பாக வலுக்கும் என்றும் நம்பலாம். வெளிநாட்டு உறவு விஷயங்களில் கிஸ்ஸிஞ்சர் பெரிய ‘சினிமா கதாநாயகர்’ போல நடந்துகொள்பவர். அவரது சொந்த விருப்பு வெறுப்புக்கள் அமெரிக்க—இந்திய உறவு வளர்வதில், தளர்வதில் பங்கு கொண்டிருந்தன.

கார்ட்டர் ஆட்சியில் விஷயங்கள் அடிப்படை அளவில் ஆராயப்படும், நியாயமாகப் பரிசீலிக்கப்படும் என்று நம்பலாம். ஒரு ஜனநாயக இந்தியாவின் கை வலுப்படுவது, பொருளாதார ரீதியில் இந்தியா உறுதிப்படுவது எல்லாம் அமெரிக்கா போன்ற ஜன நாயக நாடு பெரிதும் விரும்பும் நல்ல செய்திகளாகும்.

நமது வாரப் பத்திரிகை 'குமுதம்' ஜனாதிபதி கார்ட்டரின் வெற்றியைப் பாராட்டும்போது, "அவரது தாய் நம் நாட்டுக்கு வந்திருந்தார்—ஆகவே, கார்ட்டர் நம்ம வீட்டுப் பிள்ளை" என்று குறிப்பிட்டிருந்தது. இந்தியர்களாகிய நாம், விஷயங்களைப் பாசஉணர்வில், ஆசை நோக்கில் சிந்திப்பவர்கள் என்பதற்கு மேற்சொன்ன தலையங்கம் நல்ல உதாரணம். கார்ட்டரும் அமெரிக்கர்களும் உணர்ச்சியை முன் வைப்பவர்களல்ல. அந்தந்த விஷயங்களை அந்தந்த சமயத்திற்கேற்ப—அவர்கள் சௌகரியத்திற்கேற்ப பரிசீலிப்பவர்கள். கார்ட்டர் வந்துவிட்டார்—நம்ம வீட்டுப் பிள்ளை என்று விஷயங்களை அணுகாது பிரச்னைகளின் நியாயங்களில் நாம் கவனம் செலுத்து வது நல்லது. 'அப்பனும் பிள்ளையுமானாலும் வாயும் வயிறும் வேறு' என்று கூறுகிறோமே, அதுதான் அமெரிக்க ஏமாற்றங்களைத் தவிர்க்க உதவும்.

*கார்ட்டர் எப்படிப்பட்ட தலைவராக வருவார்?*

ட்யூக் பல்கலைக்கழகத்து அரசியல் பேராசிரியர் பார்பர், தலைவர்களை செயல்படுபவர் என்றும் சம்பவங்களை நிகழவிடுபவர் என்றும் இரண்டு பிரிவாகப் பிரிக்கிறார் (Active and Passive). முன்னவர் துடிப்பானவர், பின்னவர் காத்திருப்பவர். அதேபோல

தலைவர்கள் செய்வதைக் கொண்டு நேர்செயல் கொண்டவர் என்றும் எதிர்செயல் கொண்டவர் (Positive and Negative) என்றும் பிரிக்கிறார். இந்த இரண்டின் சேர்ந்த நிலையால் ஒரு தலைவர் துடிப்பான நேர்செயல் கொண்டவராக இருக்கலாம். அல்லது காத்திருக்கும் எதிர்செயல் கொண்டவராக இருக்கலாம். பார்பர், கார்ட்டரை துடிப்பான நேர்செயல் செய்பவர் என்று கணிக்கிறார். தலைவருடைய குணநலன்களில் ஐந்துவகைப் பகுதிகள் உண்டு. பார்பரின் சித்தாந்தப்படி அவை: உலக நோக்கு, நடந்துகொள்ளும் விதம் (Style), அதிகாரநிலை, எதிர்பார்த்திருக்கும் சூழ்நிலை, தலைவனது பண்புகள்.

பார்பர் கூறுகிறார்: "லிண்டன் ஜான்சனும், நிக்சனும் மக்களுக்கு எது செய்வோம் என்று கூறினார்களோ அதற்கு நேர்எதிராகக் காரியங்களைச் செய்தார்கள் ஜனாதிபதியாக" என்று. பார்பர் மேலும் கூறுகிறார்: "ஜனாதிபதியாக அவர்கள் என்ன செய்தார் களோ அதைச் செய்ய அவர்கள் இளவயதிலிருந்து அத்தகைய குணங்களால் தங்களை வளர்த்துக் கொண்டார்கள்" என்று. ஜனாதிபதி பதவி அவர்களது குணங்களை மிகைப்படுத்தியது. நிக்சனது சந்தேகத் தையும் கென்னடியின் தைரியத்தையும் அது உலகின் முன் வைத்தது.

ஒரு மனிதனது ஒவ்வொரு செயலும் சொல்லும் அவனை வெளிக்காட்டுகிறது என்கிறார் பார்பர். கண் இமைகள், கைகள், உடலசைவுகள், முன் நெற்றி என்று எல்லாம் மனிதனின் குணங்களைக் கோடி காட்டுகின்றன.

மனிதர்கள் இன்று பேசும் உயர் கொள்கைகள் அவர்களது இளவாழ்வில் எவ்வளவு ஊறி வளர்ந்திருக்கின்றன என்பதைப் பொறுத்தே அவர்களது நாளைய செயல் இருக்கும் என்கிறார் பார்பர். எப்படி இருந்தது கார்ட்டரின் இளவயது வாழ்க்கை? நல்ல குடும்பத்தில் கண்டிப்பான சூழ்நிலையில் வளர்ந்தார்.

மனிதர்கள் ஒரு பெரிய தொழிலை—பதவியை—மேற்கொள்ள இருக்கும்போது அவர்களை சோதனையிடுவது முறையல்ல. அவர்களை ஊக்கமூட்டி உற்சாகப் படுத்தி அவர்களிடமுள்ள நல்லவற்றை—திறமைகளை—வெளிக்கொணர வேண்டிய சந்தர்ப்பம் அது. மகிழ்ச்சியுடன் பாராட்டி, அன்புக்கரம் கொடுத்து முன்னோக்கிப் பார்க்க வேண்டிய தருணம் அது. ஆகவே அவரை எடை போடுவதை இத்துடன் நிறுத்திக் கொள்வோம்.

அமெரிக்கா வலுபடைத்த நாடு, செல்வம் படைத்த நாடு, உதவும் நல்ல எண்ணம் கொண்ட லட்சோப லட்சம் மக்கள் வாழும் உயர் நாடு. அந்த நாட்டின் லட்சியங்களுக்கும், உலகின் சுபிட்சத்திற்கும் பாடுபட அவர் தன்னை இன்று அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறார். அவரையும், அவர் குடும்பத்தினரையும், அமெரிக்க நாட்டினையும் வாழ்த்துவோம்.



